



# ஸப்தகிரி

ன் - 1988

விலை ரூ. 1/-



திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்

# ANNAMACHARYA JAYANTHI CELEBRATIONS AT HYDERABAD



Sri Ch. Venkatapathi Raju, I.A.S., Executive Officer, T.T.D. welcoming the gathering.



Sri P. Venkateswara Rao, Editor, Andhra Prabha, Receiving the memento from Sri J.R. Pushparaj, The Minister for Sports of Andhra Pradesh.



Smt. G. Shoba Raju's Vocal Concert



Sri D. Sitaramaiah, Chairman, T.T.D. Board, felicitating Kumari Sobha Naidu



Sri D. Sitaramaiah releasing the T.T.D. Publications



Sri S. Satyanarayana, Minister for Endowments, A.P. releasing the Annamacharya Cassettes



**குருமுகமநதீத்ய ப்ராஹ வேதாநசேஷாந் நரபதிபரிக்ல்ப்தம் சுல்கமாதாது காம: ;**
**ச்வசுரமமரவந்த்யம் ரங்கநாதஸ்ய ஸாக்ஷாத் த்விஜகுலதிலகம் தம் விஷ்ணுசித்தம் நமாமி.**

*யாவரொரு பெரியாழ்வார் வல்லபதேவ னென்கிற அரசனால் ஏற்படுத்தப்பட்ட பந்தயப் பொருளாகிய பொற்கிழியை க்ரஹிக்க எண்ண முடையவராய், ஆசார்யமுகமாக ஒரு கல்வியையும் கற்காமலே (பரதத்துவ நிர்ணயத்திற்கு வேண்டிய) வேதங்களெல்லாவற்றையும் (பகவத் கிருபையினால்) எடுத்துரைத்தாரோ, தேவர்களினால் ஸேவிக்கத் தகுந்தவரும் ஸ்ரீ ரங்க நாதனுக்கு நேராக மாமனாரும் பிராமண குலத்திற்குத் திலகம் போன்றவருமான அப்பெரியாழ்வாரை வணங்குகின்றேன்.*

***ஸ்ரீ நாதமுனிகள்.***

ஜுன் 1988

# ஸப்தகிரி

தனிப்பிரதி ரூ. 1 — மலர் 19

வருடச் சந்தா ரூ. 12 — இதழ் 1

## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

முன்னட்டையில் . 'ஒலியிலிருந்து ஆன்ம ஒளி
சித்திரம் : ஆர். பி. பாபுநாத்

2-வது, 3-வது } அண்மையில் ஆந்திர மாநிலத்தில் நடைபெற்ற அன்னமாச்சார்யா ஜெயந்தி விழா புகைப்படக்காட்சிகள்

பின்னட்டையில் : ஸாக்ஷாத்கார வைபவம்
ஸ்ரீநிவாசாமங்காபுரம்

சிறப்பாசிரியர்
திரு. சி.எச். வெங்கடபதிராஜு
I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

ஆசிரியர்
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

துணையாசிரியர்:
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri"
T. T. Devasthanams,
TIRUPATI

# உங்களுடன் . . . .

'ஓம்' எனும் பிரணவ ஒலியிலிருந்துதான் அனைத்தும் தோன்றியதாகக் கூறுவர் ஞானியர். வேதங்களின் கருவறையாக ஓங்காரம் விளங்குகின்றது. எல்லா மொழிகளுக்கும், எல்லா சமயங்களுக்கும் அடிப்படையானது 'ஓங்காரம். எங்கும், எதிலும் பரந்திருக்கும் அப்பரம்பொருளை நெருங்கிட நமக்கு வழி காட்டுவது ஒலி ஒன்றுதான். ஆகவே ஒலி அபர பிரம்மன் என்றழைக்கப்படுகிறது. அப்பரம்பொருளை ஏத்திடும் எல்லா மந்திரங்களும் ஓங்காரத்திலிருந்து தோன்றியதால்தான், 'ஓம்' என்பது அம்மந்திரங்களின் ஆத்மாவாக விளங்குகிறது. அந்த ஓங்காரத்தின் மூலம் அப்பரமனை அறிந்தவர் நிறை ஞானியாகின்றார். ஆத்ம ஞானம் கைவரப் பெற்ற அவர்களை மெய்ஞ்ஞானிகளாகப் போற்றப் பெறுகின்றனர். நாதப்பிரம்மமான ஓங்காரத்தினை சுவானுபூதியில் கண்டறிந்த மெய்ஞ்ஞானிகளின் அடியொட்டி தேவரிஷி, பிரம்மரிஷி, ராஜரிஷி எனும் ரிஷிகளும், முமுக்ஷுக்கள், சாதகர்கள், பரம சித்தர்கள் எனும் மாமுனிவர்களும் இப் புண்ணிய பூமி மேன்மையுற வழிகாட்டிச் சென்ற ஆன்றோர்களாவர். இவர்கள் யாவரும் ஓம் எனும் வில்லில் மனம் எனும் அம்பு பூட்டி, பிரம்மன் எனும் அவ்இலக்கினை அடைந்து பேரானந்தம் கைவரப்பெற்ற ஞானியர் ஆவர். அவர்கள் வழிவகுத்த பாதையே சமய அறிவு எனும் பெரும் ராஜவீதியாகும்.

'வித்யயா அம்ருதமஷ்னுதே' எனும் வாக்கின்படி கல்வி மூலம் அமுதமான அப்பரமனின் பெருமையை அறிந்து அவனை உணர வழிவகுத்தனர் முற்றும் உணர்ந்த அம்முனிவர்கள். உள்ளத்தினில் ஒளி உண்டாயின் வாக்கினில் உண்மை ஒளி ஒளிரும். மனம் செம்மையுறுமாயின் செயலும் சீர்மையுடன் விளங்கும். இதற்கு வழிகாட்டுவது சமயக்கல்வி ஒன்றேயாம். விஞ்ஞான வளர்ச்சி மெய்ஞ்ஞான அறிவின்மீது அமைந்தால், அது ஆக்கப் பூர்வமான சமுதாய மேம்பாட்டிற்கு வழிவகுக்கும் இல்லையெனின் அழிவுதான் விஞ்ஞானத்தின் வெற்றியாக அமையும். இவ் அடிப்படை உண்மையினை அன்றே உணர்ந்த நம் ஆன்றோர்கள் சமய அறிவின் முக்கியத்துவத்தை மானிடன் அறிதல் வேண்டும் என்ற உயர்ந்த நோக்கத்தில், அப்பரம்பொருள் உண்மையினைப் பற்றி அறிந்து தெளிந்தவற்றை - தாங்கள் பெற்ற அனுபவத்தினை-வேதம் விதந்தோதிய உயர் கருத்துக்களை-புராணங்கள், இதிஹாஸங்கள், தோத்திரங்கள் என்று பல வகைகளில் பரவவிட்டனர்.

தான், தனது என்று தன்னையறியாது தன்னலப் புதை மண்ணில் புதைந்துவிட்ட இன்றைய சாமான்யனுக்கு, அன்றைய ஞானியர் ஆசார்ய பெருமக்கள் கூறிச்சென்ற இந்து சமயப் பேருண்மைக் கருத்துக்களை அறிந்து தெளிய வாய்ப்போ, காலமோ, அல்லது அவற்றை விளக்க தகுந்த வழிகாட்டிகளோ இல்லாத இந்நிலையில், உதவுவது ஆன்றோர் அன்றுவிட்டுச் சென்ற சமயக் கருத்துக்களை, அவர்களிடையே பரப்ப எடுத்துக்கொள்ளும் முயற்சிகளேயாம். பல பனை ஓலைகளிலும், கற்களிலும், ஓவியங்களிலும் விட்டுச் சென்ற அச்சமயக் கருத்துக்கள், குடத்தில் இட்ட விளக்காக தன்னை அண்டினவர்க்கு மட்டுமே உதவின. இந்நிலையில்தான் விஞ்ஞானம் மெய்ஞ்ஞானம் சிறக்க வழி வகுத்தது. 'அச்சுயியல்' வளர்ச்சி நாம் செய்த பேருகும். கற்க வேண்டியன கற்றவர்களோடு முடிந்துவிடாமல் மற்றவரும் அறிந்து தெளிந்திட அச்சுயியல் பெரிதும் உதவியது. ஊண் மறந்து, உடுக்கை துறந்து காடு, மலை, ஆறு என அலைந்து திரிந்து அன்று அம்மெய்ஞ்ஞானியர் தேடிக் கண்டிட்ட சமயம் பற்றிய உண்மைகள் அவர்தம் தத்துவ அனுபவங்கள் இன்று பல சமய ஆராய்ச்சியாளர்கள், எழுத்தாளர்கள் மூலம் எளிதாக்கப்பட்டு, நம் வீட்டைத் தேடிவரும் நிலை நாம் செய்த நற்பேறேயாகும். இதனைத் தம் வாழ்நாளின் ஒரு நல்வாய்ப்பாகக் கொண்டு, அத்தகு சமயக் கருத்துக்களைப் பல்வேறு எழுத்தாளர்களைக் கொண்டு பல பொது மற்றும் தனியார் நிறுவனங்களும், தனிமனிதர்களும் பல நூல்களாக வெளியிட்டு வருகின்றனர்.

இப்புனித பணியில் திருமலை திருப்பதி தேவஸ்தானம் பல ஆண்டுகளாகத் தன்னை ஐக்கியப்படுத்திக் கொண்டு, பல நூல்களைத் தன்னுடைய அச்சகத்தில் பிரசுரித்தும், அவற்றை மலிவு பதிப்பு முறையில் வெளியிட்டும் வந்துள்ளது. அண்மைக் காலமாக அப்பணியினை மேலும் தீவிரப்படுத்தும் வகையில் பல நூல்களை மலிவுப் பதிப்பாகத் தொடர்ந்து பல மொழிகளில் பிரசுரித்து வருகின்றது. இது மட்டுமன்றி, அந்நூல்களை சாமானியனும் பெற்றுப் பயனுறும் வகையில் தள்ளுபடி மற்றும் விற்பனைத்தரகு போன்ற சலுகைகள் அளித்தும், அத்தகு நூல்களை திருப்பதி மற்றும் திருமலை மட்டுமன்றி நாட்டிலுள்ள தன் பல்வேறு தகவல் தொடர்பு நிலையங்களிலும் மற்றும் சமய நிகழ்ச்சிகள், பொருட்காட்சிகள் போன்று மக்கள் கூடும் இடங்களிலும் விற்பனை செய்து மக்களை நோக்கி சமய அறிவு செல்லும் வகையில் பல்வேறு முயற்சிகளை தி. தி. தேவஸ்தான மேலாண்மைத் தன் திருத்தொண்டாக மேற்கொண்டு வருகின்றது. மேலும் பல சமய எழுத்தாளர்களை ஊக்குவிக்கும் வகையில் அவர்கள்தம் படைப்புகள் வெளிவரும் வகையில் நிதி உதவி அளித்தும் வருகின்றது. இவற்றினூடே விளம்பரமின்றி இந்து சமயச் சிறப்பு, சமயத் தலைவர்களின் சிந்தனை சீர்மை, இந்து கலாசாரத்தின் பெருமை ஆகியவற்றைப் பலரும் அறிந்து இன்புறும் வகையில் 'ஸப்தகிரி'யினை வெளியிட்டு வருகின்றது. இம்மாத இதழிலிருந்து தனது மற்றுமொரு ஆண்டில் அடியெடுத்து வைக்கும் இத்தருணத்தில், இப்பத்திரிகை மேலும் தன் திருப்பணியில் வெற்றி காணும் வகையில் நேரிடையாகவும் மறைமுகமாகவும் 'ஆக்கமும் ஊக்கமும் தந்துவரும் வாசகர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும் தன் நன்றியைக் கூறிடும் தி. தி. தேவஸ்தானம் தான் மேற்கொண்டு வரும் 'இச்சமய நூல் விற்பனைத் திட்டம் மேலும் வெற்றி பெற்றிட அவ்ஏழுமலையானின் திருவடிகளை நாளும் பணிந்தேத்துகிறது.

# செய்திச் சுருக்கம்

**ஜெயந்தி விழா :**

ஸ்ரீ தாள்ளபாக்கம் ஸ்ரீ அன்னமாச் சார்யாவின் 580-ஆவது ஜெயந்தி விழா 3-5-88 முதல் 11-5-88 வரை ஒன்பது நாட்களுக்கு தி. தி. தே. ஆதரவில் ஆந்திர மாநிலத்தில் வெகுச் சிறப்பாக நடைபெற்றது. முதல் இரு நாள் நிகழ்ச்சிகள் ஹைதராபாத்தில் நடைபெற்றன. ஹைதராபாத் ரவீந்திர பாரதி அரங்கில் நடைபெற்ற துவக்க விழா நிகழ்ச்சிகள் ஆந்திர மாநில விளையாட்டுத் துறை அமைச்சர் திரு. ஜே. ஆர். புஷ்பராஜ் தலைமையில் துவங்கின. ஆந்திர மாநில அறநிலையத்துறை அமைச்சர் திரு. சிம்மாத்ரி சத்யநாராயணு, தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு. டி. சீதாராமய்யா, தி. தி. தே. அன்னமய்யா திட்டத்துறைத் தலைவர். திரு. டாக்டர். மேடஸானி மோகன், ஆந்திர பிரபா பத்திரிகை ஆசிரியர் திரு. பி. வேங்கடேஸ்வர ராவ் மற்றும் பலரும் பங்கேற்று உரையாற்றினர். அறநிலையத்துறை அமைச்சர் அவர்கள் இவ்விழாவின் போது அன்னமய்யா பாடல்கள் ஒலிப்பதிவு செய்யப்பட்ட ஒலி நாடாக்களை வெளியிட்டார். திரு. டி. சீதாராமய்யா அவர்கள் தி. தி. தே. பிரசுரித்த 17 சமய நூல்களை வெளியிட்டுப் பேசுகையில், அடுத்த ஆண்டு முதல் அன்னமய்யா நிகழ்ச்சிகள் மற்றைய மாநிலங்களிலும் நிகழ்த்தப்படும் என்று குறிப்பிட்டார். அன்று மாலை குமாரி. ஷோபா நாயுடு அவர்களின் நாட்டிய நிகழ்ச்சி நடைபெற்றது. 5-5-88 மற்றும் 6-5-88 தேதிகளில் விஜயவாடாவில் நடைபெற்ற அன்னமய்யா நிகழ்ச்சிகளின்போது, ஆந்திர மாநில வேளாண்மைத்துறை அமைச்சர் திரு. வசந்த நாகேஸ்வர ராவ் சிறப்பு விருந்தினராக பங்கேற்றார். 7-5-88 மற்றும் 8-5-88 தேதிகளில் காகினாடாவில் நடைபெற்ற ஜெயந்தி விழா நிகழ்ச்சிகளின்போது, ஆந்திர மாநில அறநிலையத் துறை ஆணையர் திரு. ஜே. பாபுரெட்டி அவர்கள் சிறப்பு விருந்தினராகவும், கிழக்குக் கோதாவரி மாவட்டத் தலைவர் திரு. சி. பி. எஸ். வெங்கடரமணு அவர்கள் நிகழ்ச்சிகளுக்குத் தலைவராகவும் பங்கேற்றனர். 9-5-88 அன்று அன்னமய்யா நிகழ்ச்சிகள் அவர் பிறந்த இடமான தாள்ளபாக்கத்தில் வெகுச் சிறப்பாக நடைபெற்றன. இறுதி இரண்டு நாள் நிகழ்ச்சிகள் திருப்பதி ஸ்ரீ அன்னமாச்சார்யா கலாமந்திரத்தில் நடைபெற்றன. 11-5-88 அன்று நடைபெற்ற இறுதி நாள் விழா நிகழ்ச்சிகள் தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. சி.எச். வெங்கடபதி ராஜு அவர்களின் தலைமையில் அமைந்தன. இதுபோது, திருவேங்கடவன் பல்கலைக்கழகக் கல்லூரியின் தத்துவத்துறைத் தலைவர் பேராசிரியர் திரு. வீரய்யா அவர்கள் சிறப்பு விருந்தினராக பங்கேற்றார். மேலும் முன்னாள் தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுத் தலைவரும், செயலாட்சித் தலைவருமான திரு. சி. அண்ணாராவ், தி. தி. தே. பாதுகாப்பு அலுவலர் திரு. எஸ். கே. ஜெயசந்திரா, திரு. மேடஸானி மோகன் ஆகியோரும் பங்கேற்று உரையாற்றினர். இவ்வொன்பது நாள் நிகழ்ச்சிகளின்போது காலை நேரங்களில் அன்னமய்யா பாடல்களைப் பற்றிய உரைக் கோவைகளும், மாலை நேரங்களில் புகழ்பெற்ற கலைஞர்கள் பங்கேற்ற இன்னிசைக் கச்சேரிகளும், நாட்டிய நாடக நிகழ்ச்சிகளும் நடைபெற்றன.

**மற்றைய செய்திகள் :**

கூடூரில் உள்ள தி. தி. தே. திருமண மண்டபத்தின் நாள் ஒன்றிற்கான வாடகை கட்டணம் ரூ. 100/லிருந்து ரூ. 300/- ஆக உயர்த்தப்பட்டுள்ளது.

ஃ ஃ ஃ

திருப்பதி எஸ். வி ஆர். ஆர். அரசு மருத்துவமனையின் புற்று நோய் பிரிவிற்குத் தேவையான நவீன கருவிகள் வாங்குதற்கென ரூ. 2.83 இலட்சம் வழங்க தி. தி. தே. முடிவு செய்துள்ளது.

ஃ ஃ ஃ

திருமலையில் இனிமேற் கொண்டு நடைபெறும் ஒவ்வொரு வருடாந்திர பிரம்மோற்சவத்தின் போதும் 'மலர்க் கண் காட்சி' ரூ. 25,000 செலவில் ஒன்று நடைபெற உள்ளது.

**கட்டணக் குறைப்பு :**

திருமலையில் கீழ்வரும் ஆர்ஜித சேவைகளின்போது இறைவனின் திருவுருவம் பொறிக்கப் பெற்ற தங்கப் பதக்கங்களை வழங்கப்படுவது நிறுத்தப்பட்டதை ஒட்டி, மேற்படி சேவைகளின் கட்டணங்கள் கீழ் வருமாறு குறைக்கப்பட்டுள்ளன.

திருப்பாவாடை ரூ. 3,500/-

ஸகஸ்ர தீபாலங்கார ஸேவை ரூ. 500/-

அஷ்டதள பாதபத்மாராதனம். ரூ. 3,500/-.

ஃ ஃ ஃ

திருமலையில் தங்கும் யாத்திரிகர்களின் வசதியை மனதிற்கொண்டு, அதிக இடம் உள்ள பல்வேறு குடில்களில் மேலும் பல கட்டில்கள், படுக்கைகள், தலையணைகள் ஆகியன இடம் பெறும் வகையில் ரூ. 46,00,000/- ஒதுக்கப்பட்டுள்ளது.

ஃ ஃ ஃ

திருமலையில் நடைபெறும் நித்ய அன்னதான திட்டத்தினைப் பொது

(48-ம் பக்கம் பார்க்க)

# வாமன-திரிவிக்கிரமாவதாரங்கள்

நீண்டவர்தம் மனம்மகிழ
மாவலிதன் வேள்விக்
களவுஇல்மிகு சிறுகுறளாய்
மூவடிஎன்று இரந்திட்டு
அண்டமும்இவ் அலைகடலும்
அவனிகளும் எல்லாம்
அளந்தபிரான்.
(பெரி. தி 3.10:5)

[வேள்வி-யாகம்; குறள்-குட்டை; இரந்திட்டு - யாசித்து; அவனிகள் - உலகங்கள்].

என்று வாமன-திரிவிக்கிரம அவதாரங்களில் மனம் உருகி ஆழங்கால் பட்டு மகிழ்கின்றார் மங்கை மன்னன். காசியபமாமுனிவன் தன் பத்தினியுடன் சேர்ந்து ஆயிரம் ஆண்டுகள் திருமாலைக் குறித்து தவம் புரிந்து அதன் பலனாக அவர்கட்கு மகனாகப் பிறந்தவன் வாமனன். இதனைக் கம்ப நாடன்,

நீல நிறத்து நெடுந்தகை வந்தோர்
ஆலமர் வித்தின் அருங்குற ளானான்.
(பாலகா. வேள்விப்-21)

என்று காட்டுவான். தேவ லோகத்தைக் கவர்ந்து கொண்ட மாவலியிடமிருந்து மீட்பதற்காகத் திருமால் எடுத்த அவதாரங்களே வாமன-திரிவிக்கிரமாவதாரங்கள்.

சிறந்த திருமாலடியானான மாவலி அக்காலத்தில் நர்மதை நதிக்கரையில் வைணவ யாகம் செய்து கொண்டிருந்தான். இதுதான் தக்க சமயம் என்று கருதி முப்புரி நூலையும் முஞ்சிப் புல்லாலாகிய அரை நாணையும் தரித்துக் கொண்டு வேத மந்திரத்தை உச்சரித்துக் கொண்டு ஒரு மாணி வடிவங் கொண்டு மாவலியிடம் சென்றான் வாமனன். மாவலியோ வேண்டினார்க்கு வேண்டினபடி வரையாது கொடுக்கும் வள்ளண்மை வாய்ந்தவன். வாமனன் வருவதை யறிந்த மாவலி அவ்வாமன வடிவத்தால் மனங்கவரப்பட்டு முற்பட்டுச் சென்று எதிர் கொண்டு வரவேற்கின்றான். "எல்லா நற்குணங்களும் நிறைந்தவனே, நின்னிலும் சிறந்த அந்தணர் இல்லை. இப்படிப்பட்ட நின்னைச் சேவிக்கப் பெற்ற என்னைப் போல ஈடேறினவர் யாவர்?" என்று கூறிப் புகழ்கின்றான்.

இங்ஙனம் மாவலி வாமனனைப் புகழவும், முற்றும் அறிந்த முகுந்தன், "வள்ளலே, இரப்பவர்களின் விருப்பத்தினும் அதிகமான பொருள்களை விரைந்து வீசி எறியும் நீண்ட கையையுடையவனே! இப்படிப்பட்ட வள்ளண்மையுள்ள நின்னிடம் வந்து இரப்பவர்கள்தாம் மாட்சிமைப்பட்டவர்கள்; உன்னிடம் வாராதவர்கள் சிறப்பை இழந்தவர்கள்!' என்று கூறி

டாக்டர். ந. சுப்புரெட்டியார்,
சென்னை-40.

ஏத்துகின்றான். இதனைக் கேட்ட மாவலி மிக்க மகிழ்ச்சி எய்தி, 'தங்கட்கு அடியேன் என்ன செய்ய வேண்டும்?' என்று கேட்க, அந்தணன் அவனை நோக்கி, 'வெந்திறலோய், அடியேன் தவம் புரிய வேண்டும். என் மீது நினக்குக் கருணை உளதானால், என் காலால் மூன்று அடியளவு நிலம் அளந்து கொள்ள இசைவு தர வேண்டும்' என்று கூறி வேண்ட, அரக்கர் கோனும் 'அங்ஙனமே ஈந்தேன்' என்று விரைந்து மறுமாற்றம் உரைக்கின்றான்.

மாவலியின் குருவாகிய சுக்கிரன் இதனைத் தடுக்கின்றான். சுக்கிரன் தவமிகுதியால் ஞானக்கண் பெற்றவனாதலால், குள்ளனாக வந்த கள்ளனின் வஞ்சகத்தை நன்கு அறிந்து, 'அரசனே, திருமாலே தனது மாயத்



## பாரதமும்-கீதையும்

திரு. ந. முராரி, எம்.ஏ. பி.இஎட்., — சேலம்.

பாண்டவர்கள் தூதுவனாய் நடந்த காலை
மாண்டவர்கள் வீடுமனின் கடந்த வேளை
ஆண்டவர்கள் நாரணனை விளைத்த கோலம்
ஈண்டவர்கள் கீதைதனைக் கேட்க லானார்.

தனியினத்தின் காவலதைக் கடக்க வேண்டி
கனியினத்தில் விராடத்தே புகுந்த வேளை
பனியிடத்தில் செழுமையிதை உணர்த்த வேண்டி
சினவிடத்தில் கழுவாயைக் கழுவ விட்டார்.

விட்டகுறை வேண்டுமதில் குடையை விட்டு
தொட்டகுறை தாண்டுதலில் விரைந்து நிற்க
பட்டகுறை ஆட்சிதனில் அழுத கோலம்
தட்டமுறை தாண்டவத்தை ஆட்டி நிற்கும்.

நின்றவழி செம்மையுற உறைத்து நின்று
வென்றவழி நன்மைவழி விறைத்து உய்ய
சென்றவழி நலந்தீதை ஆய்ந்து சொல்ல
கண்டவழி செருநெறியை விளக்கி நிற்கும்.

விளக்கிநின்ற பொருடனே போன பேர்கள்
கலக்கவந்து நின்றோரை அகலக் காட்டி
மயக்கவந்து மயக்கறுத்து மயலாய் நின்றார்
தயக்கமின்றி துயரறுத்து துறக்கம் போனார்.

போனபின்றை மாயவனும் வில்லால் பட்டு
சேனைவென்ற செருமுகமே போகந் துய்ப்ப
தானைதன்னை அழுகைவழி அமைக்கச் சொல்லி
பானைதன்னை போம்வழியே தானும் சென்றார்.

சென்றவழி நல்வழியாய் அமைந்து நிற்க
நின்றவழி அல்வழியை அடைத்து நிற்க
கண்ணன்வழி கீதைதனை உணர்த்தி நிற்கும்
மண்ணின்வழி மாதனைப் போற்றி சைக்கும்.

தால் தன் உருவை மறைத்து உன்னை வஞ்சிக்கக் குள்ளனாக வந்திருக்கின்றான். இவனுக்குத் தானம் செய்யாதே; செய்தால் உனக்குப் பெரும் தீங்கு விளையும்', என்று எச்சரிக்கின்றான். உடனே மாவலி, 'குருநாதா, கொடுக்கும் என் கைமேலும், 'தனது பெருமைக்குத் தகாதபடி இறங்கி'யானது கை கீழும் இருக்கின்றது என்றால், இதனினும் மேலான நன்மை எனக்கு என்ன உளது? நீ இதனைக் கருதவில்லையே!' என்று கூறுகின்றான்.

தொடர்ந்து மாவலி தன் குருநாதனிடம் வள்ளண்மையின் பெருமையைப் பற்றி எடுத்துரைக்கும் சொற்கள் கஞ்சப் பிரபுக்களின் கண்ணைத் திறக்கக் கூடியவை. 'அசுர குலத்தவர்களான நாம் தேவ குலத்தவர்கட்கு (பகைவர்கட்கு)-திருமாலுக்கு தானம் செய்தல் கூடாது என்று கருதலாம்; ஆனால் வேண்டியவர், வேண்டாதவர் என்று கருதாமல் நல்லவர்கட்கு வழங்க வேண்டுமென்பதே அறநூல் கொள்கையாதலின், நீ கூறுவது நேர்மையன்று. அப்படி ஆராய்ந்தாலும் திருமாலுக்கு மிக்கவாயினும் ஒத்தவராயினும் உலகில் உளரோ? ஆகவே தானம் செய்வதற்குரிய சற்பாத்திரம் இவனே யாகும்.' என்கின்றான். மேலும் தொடர்ந்து, 'நீ அறியாமையால் இவ்வாறு கூறினாய். நீ வெள்ளியல்லவா? மேலோர் வரையாது வழங்குபவராதலால், அவர்களால் வழங்கப் பெறாதவை என்று விலக்கப் பெற்ற பொருள்கள் உளவோ? இனிய உயிரேயாயினும் இரந்து பெறுவது தீது; வழங்குவது நன்று.

நல்லாறு எனினும்
கொளல்தீது மேலுலகம்
இல்லெனினும் ஈதலே
நன்று. (குறள் 222)

என்பது வள்ளுவம் அன்றோ?' என்கின்றான்.

இன்னும் கூறுவான்: 'எந்தாய், இறந்தவர்கள் எல்லாம் இறந்தவர்கள் அல்லர்; ஏந்திய கையோடு இருப்பவர்களே இறந்தவர்கள்! தானம் செய்தவர்கள் இறந்தாலும் இருப்பவர்களே யாவர். 'மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர், தம் புகழ் நிறீஇத்தாம் மாய்ந்தனரே' (புறம்) என்பது ஆன்றோர் வாக்கு. தவிர, ஒருவருககு மேலும் மேலும் தீமை செய்பவர்கள் பகைவர்கள் அல்லர் தானம் செய்பவர்களைத் தடுப்பவர்கள்தாம் பெரும்பகைவர்களாவர். 'ஈவது விலக்கேல்' என்பது உலக வசனம். இன்னும் கொடுப்பவர்களைத் தடுத்து உலோபகுணத்தை விடக்கூடாது என்று உபதேசிப்பவர்களே உட்பகைவர்களும் ஆவர். நற்குணம் இல்லாத குருநாதரே, இரப்பவர் ஒருவருக்கு அவர் விரும்பிய பொருளைக் கொடுப்பதற்கு

முன்னர் அதனைத் தடுப்பது குருவாகிய நினக்கு அழகுடையதன்று. இக்கொடுஞ் செய்கையால் 'உடுப்பதுவும் உண்பதுவும் இன்றி விடுகின்றாய்?''

கொடுப்பது அழுக்கறுப்பான்
சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக்
கெடும். (குறள்-166)

இங்ஙனம் கூறிய மாவலி தன் குருவின் அறிவுரையை உதாசீனம் செய்து

அடியொரு மூன்றுநீ
அளந்து கொள்கென
நெடியவன் குறியகை
நீரின் நீட்டினுன். (வேள்விப். 34)

எப்படியும் தன் அருமைச் சீடனாகிய மாவலி கெடக் கூடாது என்று கருதிய சுக்கிரன் ஒரு வண்டின் வடிவை மேற்கொண்டு கமண்டல நீர் விழாதபடி அடைத்துக் கொள்ளுகின்றான். குள்ளன் இதனை அறிகின்றான். துவார சோதனை செய்பவன் போல் தனது திருக்கையில் உள்ள தருப்பையாலான திருப்பவித்திரத்தின் நுனியாலே குத்தின அளவில் சுக்கிரனின் ஒரு கண் பழுதுபடுகின்றது; நீரும் கையில் விழுகின்றது. வாமனனின் இச் செயலை,

மிக்க பெரும்புகழ்
மாவலி வேள்வியில்
தக்கஇது அன்றுஎன்று
தானம் விலக்கிய
சுக்கிரன் கண்ணைத்
துரும்பாற் கிளறிய
சக்கரக் கையன். (பெரி. திரு. 1.8:7)

என்று பெரியாழ்வார் அநுபவித்து அகம் மகிழ்கின்றார்.

கமண்டல நீர் கையில் பட்டுத் தாரை வார்த்துத் தந்த செயல் முற்றுப் பெற்றதும் 'பார்த்தெதிர், வியந்தவர் வெருக்கொள விசும்பின் ஓங்கினன், உயர்ந்தவர்க்குதவிய உதவி ஒப்பவே'. (வேள்விப்-35) இங்ஙனம் வாமனன் பேருருவம் கொண்டு



ருத்ரகுண்ட புஷ்கரணி - மஹாநந்தி (ஆ.பி.)

வளர்ந்ததைக் கவிஞன் 'நற்குண நற்குண நற்செயல்களால் சிறந்தவர்கட்குச் செய்த தானத்தின் பலன் போல ஆகாயத்தில் உயர்ந்து வளர்ந்தான்' என்று சிறப்பிப்பான். இங்ஙனம் வளர்ந்த நிலையில் திரிவிக்கிரமன் ஓரடியால் மண்ணுலகையும் மற்றோர் அடியால் விண்ணுலகையும் அளந்து கொள்ளுகின்றான். 'மூன்றடி தருகிறதாகச் சொன்னாய்; மற்றையோரடிக்கு இடங்காட்டாய்' என்று திரிவிக்கிரமன் கேட்க, அதற்கு மாவலி 'அடியேனது முடியே உள்ளது' என்று சொல்ல, எம்பெருமான் அதில் தன் திருவடியை வைத்து அழுத்தி அவனை பாதாளத்தில் செலுத்தினான். திருமால் விசித்திர சக்தியுடையனுதலால், உலகத்தை அளக்குங்கால் அவ்வுலகின் அளவாய் வளர்ந்து நின்ற அவனது திருவடி மூன்றும் அடி அளக்குங் கால் மாவலியின் முடியினதளவாகக் குறுகியது என்பது அறியத் தக்கது. இந்தக் காட்சியைத் திருமங்கையாழ்வார்,

ஒரு குறளாய் இருநிலம்மூ
வடிமண் வேண்டி
உலகுஅனைத்தும் ஈர்அடியால்
ஒடுக்கி ஒன்றும்
தருகஎனு மாவலியைச்
சிறையில் வைத்த
தாடாளன். (பெரி. திரு. 3.4:1)

என்று அநுபவித்து மகிழ்வர்.

வாமனன் திரிவிக்கிரமனாக வளர்ந்த அற்புதத்தைத் திருமங்கையாழ்வார் அநுபவித்து மகிழ்ந்ததை,

ஒண்மிதியில் புனல்உருவி
ஒருகால் நிற்ப,
ஒருகாலும் காமருசீர்
அவுணன் உள்ளத்து
எண்மதியும் கடந்து, அண்டம்
மீது போகி,
இருவிசும்பின் ஊடுபோய்
எழுந்து, மேலைத்
தண்மதியும் கதிரவனும்
தவிர ஓடித்
தாரகையின் புறந்தடவி

# பாகவத ரசம்!

புராணம் என்னும் தெய்வீக விருக்ஷம் தரும் பாகவதக் கனியின் இனிய ரசத்தை காலமெலாம் கணப்பொழுதும் விடாமல் அள்ளிப் பருகும் அரும்பேறு பெற்றவர்கள் அல்லவா, பரதக் கண்டத்தில் வாழும் பரம பாகவதர்கள்! இடைவிடாமல் ஊற்று எடுத்துப் பொங்கும் அது, சுகப்பிரம்மத்தின் மதுர கண்டத்திலிருந்து சொரியும் அமிர்த மொழி அல்லவா!

'பாகவத சாரோத்தாரா' நூலிலிருந்து

தகவல்: ஆர். சுப்பராவ்-திருக்கோவலூர்.

அப்பால் மிக்கு
மண்முழுதும் அகப்படுத்து
நின்ற எந்தை. (திருநெடுந். 5)

[கால்-திருவடி; புனல் - ஆவரண நீர்; எண்மதி-நினைந்திருந்த நினைவு; விசும்பு-ஆகாயம்; மேலே-மேற்பட்ட தவிர ஓடி-கடந்து சென்று; தாரகை-நட்சத்திர மண்டலம்; மண்-பூலோகம்; எந்தை-எம்பெருமான்].

என்ற திருந்நெடுந்தாண்டகப் பாசுரத்தால் கண்டு நாமும் அநுபவிக்கலாம். இந்தத் திரிவிக்கிரமனை ஆண்டாள் 'ஓங்கி உலகளந்த உத்தமன்' (திருப். 3) என்று கூறி அநுபவிப்பர்.

இந்தத் திரிவிக்கிரமாவதாரத்தை விட்டுசித்தன் மேலும் ஒருபடி சென்று அநுபவிப்பர். வாமன மூர்த்தி மாவலியிடம் தானம் வாங்கினவுடனே திரிவிக்கிரமனாய் வளர்ந்து நிலத்தை அளக்கப்புக, அதனைக் கண்ட அவன் திருவளர் செல்வன் நமுசி என்பான் ஓடி வந்து வளருகின்ற திருவடியைத்தகையத் தொடங்குகின்றான். எம்பெருமான் 'நீ ஏன் தகைகின்றாய்? நான் தானம் வாங்கிப் பெற்றதை அளந்து கொள்ள வேண்டாவோ?' என்று கேட்க, நமுசி 'நீ செய்கின்றது கபடம்!' என்கின்றான். எம்பெருமான், 'உன் திருத்தமப்பன் எனக்குத் தாரை வார்த்துத் தத்தம் பண்ணினது பொய்யோ?' என்று வினவ, நமுசி, 'என் திருத்தந்தை நின்னுடைய தீய எண்ணத்தை அறியாமல், உன் வஞ்சக வலையில் மாட்டிக் கொண்டான்' என்கின்றான். எம்பெருமான் 'நான் செய்கின்றதை வஞ்சகம் என்று எதனால் செப்புகின்றாய்?' என்று வினவ, நமுசி 'நீ செய்வது வஞ்சகம் அன்று ஆகில் நீ முன்பு இரக்கும் போதிருந்த வடிவத்தைக் கொண்டு அளந்து கொள்க' என்று பதிலிறுக்கின்றான். எம்பெருமான், 'உடல் என்பது எப்பொழுதும் ஒரே தன்மையாகஇருக்கமாட்டாதே; விகாரப்படும் தன்மையுடையது காண்; முன்றைய வடிவம் திரும்ப வராதே. திரும்பி வராத வடிவத்தைக் கொண்டு எப்படி அளக்க முடியும்?' என்று கூறுவான். இப்படிப் பல்வேறு விதமாகச் சமாதானம் சொல்லவும் கேளாமல் தான் பிடித்த திருவடியின் பிடியை விடாமல் உறுதியாக இருந்த நமுசியை வளர்ந்த திருவடியினால் ஆகாயத்தில் கொண்டு போய்ச் சுழன்று விழும்படிச் செய்தருளினான் எம்பெருமான்.

என்இது மாயம்?
என்அப்பன் அறிந்திலன்;
முன்னைய வண்ணமே
கொண்டுஅளவாய் என்ன,
மன்னு நமுசியை
வானில் சுழற்றிய
மின்னு முடியன்.

(பெரியாழ். திரு. 1.8:8)

என்ற திருமொழியில் கண்டு நாமும் அநுபவிக்கலாம். பின்னர் எம்பெருமான் திரிலோகாதி பத்தியத்தை இந்திரனிடம் அளித்துவிட்டுத் தன் வியூக மூர்த்தத்தை மேற்கொண்டு பாற்கடல் பள்ளி மேவி அறிதுயில் கொண்டருளுகின்றான்.

மாவலியின் வரலாற்றைத் திருமங்கை மன்னன் மிக அற்புதமாக அநுபவித்ததையும் கண்டு மகிழ்வோம்.

தன்உருவம் ஆரும்
அறியாமல் தான்அங்குஓர்
மன்னும் குறள்உருவில்
மாணியாய் - மாவலிதன்
பொன்இயலும் வேள்விக்கண்
புக்குஇருந்து போர்வேந்தர்
மன்னை மனம்கொள்ள
வஞ்சித்து நெஞ்சுருக்கி.
என்னுடைய பாதத்தால்
யான்அளப்ப, மூவடிமண்
'மன்னா தருக' என்று
வாய்திறப்ப - மற்றுஅவனும்
'என்னால் தரப்பட்டது'
என்றலுமே, அத்துணைக்கண்
மின்னார் மணிமுடிபோய்
விண்தடவ - மேல் எடுத்த
பொன்னார் கனைகழல்கால்
ஏழ்உலகும் போய்க்கடந்து, அங்கு,
ஒன்னா அசுரர்
துளங்க, செலநீட்டி,
மன்இவ் அகல்இடத்தை
மாவலியை வஞ்சித்து
தன்உலகம் ஆக்குவித்த
தாளானை.

என்ற பெரிய திருமடல் பகுதி காட்சியை நம் மனத்திரைக்குக் கொண்டு வருகின்றது. இந்த இரண்டு அவதாரங்களையும் எல்லா ஆழ்வார்களுமே மனமுருகி அநுபவித்ததை அவர்கள் பாசுரங்களில் நாமும் ஆழங்கால் பட்டு அநுபவித்து மகிழலாம்.



# வைணவத்தின் தோற்றமும் தத்துவங்களும்

தொடக்க காலம் :

நமது பாரத தேசத்தில் அவரவர்க்கு விருப்பமுடைய தெய்வத் திருமேனிகளைச் சமைத்து அதனை வழிபட்டார்கள். இதனால் அநேக உட்சமயங்களும் தத்துவார்த்த விவாதங்களும் நாளுக்கு நாள் வளர்ந்து வரலாயின.

இதனை நன்குணர்ந்த ஆதிசங்கரர், தம் மனத்துக்கண் நிலைநிறுத்தி ஆறு சமயங்களை (மதங்களை) மனிதர்களின் குணநலங்களை எண்ணி வகுத்துத் தந்தார்.

அவைகள் 1) "கணபதி"யை வழிபடுவோர் காணுபத்யர்கள் என்றும் 2) முருகனை வழிபடுவோர் கௌமாரர்கள் என்றும், 3) சிவனை வழிபடுவோர் சைவர்கள் என்றும், 4) திருமாலை வழிபடுவோர் வைஷ்ணவர்கள் என்றும் 5) "காளியினை" வழிபடுவோர் (அம்பிகை) சாக்தர்கள் என்றும், 6) சூரியனை வழிபடுவோர் சௌரமானர்கள் என்றும் விளக்கம் செய்து நமது அறியாமை எனும் இருள் அகன்று ஈஸ்வர ஞானம் கிடைக்க வழி செய்தார்.

இப்பகுதியில் வைஷ்ணவம் என்ற முறையில் சிந்திப்போமாக.

விஷ்ணுவை முழுமுதற்பொருளாகக் கொண்டு வழிபடுவதால் இது வைஷ்ணவம் எனப்பட்டது. விஷ்ணு என்பதன் பொருள் எங்கும் வியாபித்து இருப்பவர் என்று பொருள். எப்பொருள்களிலும் இயைந்து உறைபவன் என்று அடியார்கள் பொருள் காண்பர்.

" குறிகொள் ஆயிரத்துள்இவை பத்தும்
திருக்குறுங்குடி யதன் மேல்
அறியக் கற்று வல்லார் வைஷ்ணவர்
ஆழ்கடல் ஞாலத்துள்ளே "

எனப் பெரியாழ்வாரால் எடுத்தாளப் படுவதாகும்.

தோற்றமும் வளர்ச்சியும் :

வைஷ்ணவ மதம் மிகவும் தொன்மையானது. இச் சமயத்திற்கு இரண்டு ஆகமங்கள் உண்டு. அவை யாவன 1) பாஞ்சராத்திரம், 2) வைகானஸம் என்பன.

வேதத்தை ஒட்டி எழுந்த பிராமண உபநிடதங்களில் விஷ்ணுவின் நிலை உயர்த்திக் கூறப்பட்டது என்று கூறுவர். இவ்வுபநிடதங்கள் எழுந்த காலம் கி.மு.1500—600 என்பர். இதனை அடுத்து வந்த இதிகாச புராண காலங்களில் (கி. மு. 1000 — கி.பி. 100) மும்மூர்த்திகளில் ஒருவராக விஷ்ணு குறிக்கப்பட்டார். தொடக்க காலத்தில் வாசுதேவனும், விஷ்ணுவும் வேறு வேறானவர் எனக் கருதப்பட்டதாகத் தெரிகிறது.

பௌத்த மதம், சமண மதம் விளைவுகளால் இவ்விரு தெய்வங்களையும் ஒன்றாகக் கருதும் நிலை காலப் போக்கில் வந்து விட்டது என்றும் கருதுவர். கி. பி. 100இல் வாசுதேவ கிருஷ்ணன், விஷ்ணு, நாராயணன் ஆகிய மூன்று பெயர்களும் ஒரே கடவுளைக் குறிப்பனவாகக் கொள்ளப்பட்டன. பிஷ் நகரிலுள்ள ஹீலியோடோரஸின் கல்வெட்டுக்களும், சங்ககாலக் கல்வெட்டுகளில் சிலவும் வாசுதேவருக்குக் கோயில்கள் இருந்தன என்று குறிக்கின்றன.

இவற்றில் முன்னைய கல்வெட்டுகள் கி. மு.200யும், பின்னைய கல்வெட்டுகள் கி. மு. 185 — 72யும் சார்ந்தன. குப்தர் காலத்துக் கல்வெட்டுகளும் (கி. பி. 320 — 600) சக்ரதாரி, சனார்த்தனன், சாரங்கன் போன்ற பெயர்களில் விஷ்ணுவிற்குக் கோயில்கள் கட்டப்பட்டன எனக் கூறுகின்றன.

இவையன்றித் தமிழில் மிகத் தொன்மையான நூலாகிய தொல்காப்பியத்தில் திருமாலைப் பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன.

" மாயோன் மேய காடுறை உலகமும் "

எனும் தொல்காப்பியத்தொடரால் முல்லைநிலக் கடவுள் திருமால் எனத் தெரிகிறது. மேலும்,

---

திரு. எஸ். நாராயணசுவாமி M.A., B.Ed.
திருவாவாடுதுறை.

---

" புள்ளணி நீள் கொடிச் செல்வனும் " எனத் திருமுருகாற்றுப்படையிலும் வருகின்றது. இப்படியாகத் திருக்குறள், நற்றிணை, பதிற்றுப்பத்து, பரிபாடல் முதலான அநேக நூல்கள் திருமாலைப்பற்றியசெய்திகளைத் தருகின்றன.

வைணவ நூல்கள் :

வைணவக் கோட்பாட்டிற்கு அடிப்படையானது வேதங்களாகும். இதனுள் இருக்கு வேதத்திலுள்ள "புருஷ ஸூக்தம்" இன்றியமையாத பகுதியாகும். இவையன்றிப் பிரஸ்தானத்ரயம் எனக் குறிக்கப்பெறும் உபநிடதங்கள், பிரம்ம சூத்ரம், பகவத் கீதையும் இம்மதத்திற்கே உரிய ஆகமங்களான வைகானஸம், பாஞ்சராத்திரம் எனும் இவைகளும், பதினெட்டு புராணங்களுள் விஷ்ணு புராணம், பாகவதம், நாரதீயம், காருடம் ஆகிய நான்கும், இதிகாசங்களில் பாரதமும், இராமாயணமும், தோத்திர நூலாகிய விஷ்ணு சகஸ்ரநாமமும், இவற்றோடு பன்னி

## பஞ்ச பூதங்கள்

பஞ்சபூதங்கள் நிலம், நீர், நெருப்பு, வாயு மற்றும் ஆகாயம் என்பன ஆகும். ஒவ்வொன்றிற்கும் தனித் தனிக் கோவில் உண்டு. நிலத்திற்காக கோவில் உள்ள ஊர் காஞ்சிபுரம். நீருக்கான கோவில் ஐம்புகேசரத்தில் உள்ளது. நெருப்புக்கான கோவில் உள்ள ஊர் திருவண்ணாமலை. வாயுவின் திருத்தலம் திருக்காளத்தி. எங்கும் பரந்த ஆகாயம் சிதம்பரத்தில் அடைபட்டுள்ளது.

மேற்கூறிய ஐந்து திருத்தலங்களும் சிவ ஸ்தலங்கள் ஆகும். அவற்றில் உள்ள லிங்கங்கள் பஞ்சலிங்கம் என வழங்கப்படுகின்றன.

— திருமதி கமலா மாரியப்பன் — கோயம்புத்தூர்.

ரண்டு ஆழ்வார்கள் அருளிச் செய்த நாலாயிரத் திவ்ய பிரபந்தமும், இதனை விளக்க வந்த உரையாசிரியர்களின் திறமும், இம் மதம் மேலும் எப்போதும் பிரகாசிக்க இராமானுசரால் "விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தி"னாலும் வைஷ்ணவத் தத்துவங்கள் பரவலாயின.

வேதத்தின் சாரமாக எண்ணப்படுவது நம்மாழ்வாரின் திருப்பாசுரங்கள்.

1) திருவிருத்தம்-இருக்குவேத சாரம்
2) திருவாசிரியம்-யசுர் வேத சாரம்.
3) பெரிய திருவந்தாதி-அதர்வண வேத சாரம்.
4) திருவாய்மொழி-சாமவேத சாரம்

**வைஷ்ணவக் கோட்பாடுகள் :**

இருபத்து நான்கு தத்துவத்திற்கு மேல் உள்ள 25ஆவது தத்துவம் வாசுதேவன். அவனே பரம் பொருள். மேலும் வைஷ்ணவர்கள் தமது தத்துவங்களை அறுவகைப் படுத்தி விளக்குவர். 1) இறைவன், 2) உயிர், 3) பிரகிருதி, 4) காலம், 5) சுத்ததத்துவம், 6) தர்மபூத ஞானம் ஆகியனவாம்.

**ஐவகைத் திருமேனி :**

திருமால் ஒருவனே எனினும் தான்கொள்ளும் திருமேனி வேறுபாட்டால் ஐவகைப்படுவன். அவை யாவன :

1) பரம் — மேலான வடிவம். திருவைகுந்தத்தில் திருமகளோடு வீற்றிருக்கும் நிலை இதுவாம். இதனைத் தரிசிப்போர், திவ்ய மங்கள சொரூபம் என்பர்.

2) **வியூகம்** — வெளிப்பட்ட வடிவம். திருப்பாற்கடலில் தேவர்கள் வழிபட நிற்கும் திருக்கோலம் இதுவாம்.

3) **விபவம்** — அவதாரத் தோற்றம் பெற்ற வடிவம். அறத்தைக் காக்கவும், மறத்தை அழிக்கவும் அவ்வப்போது தோன்றி உருக் கொள்ளும் வடிவம் இதுவாம்.

4) **அந்தர்யாமித்துவம்**—உள்ளுறை வடிவம். இயங்குதிணை, நிலத்திணை ஆகிய பொருள்களில் எல்லாம் உள்ளுறைந்து நிற்கும் நிலை இதுவேயாம்.

5) **அர்ச்சா** — வழிபடுதற்குரிய வடிவம், திருக்கோயில்களிலும் கிரகத்திலும் (வீட்டிலும்) வைத்து வழிபடும் திருமேனி.

**திருக்கோலமும் குணமும் :**

விஷ்ணு, உயிர்கட்கு ஞானம் தரும் பொருட்டுத் தாமே உருக்கொண்ட நிலைகள் மூன்றாகும். அவை நின்ற கோலம், இருந்த கோலம், கிடந்த கோலமாகும். அதே சமயத்தில் அறுவகைக் குணங்களோடு விளங்குகின்றான்.

1) ஞானம் — எக் காலங்களிலும் எல்லாவற்றையும் அறிதல்.

2) சக்தி — ஆற்றல். தம்முள் பகையுடையவற்றையும் பகைமை நீக்கிக் காக்கும் திறன்.

3) பலம் — தன் நினைவு மாத்திரையில் அனைத்தையும் தாங்கிக்கொள்ளும் தகவு.

4) ஐஸ்வரியம் — அனைத்தையும் நியதிக்கும் தகுதி.

5) வீரியம் — தன் செயல்களில் என்றும் தளர்ச்சியின்றி இருத்தல்.

6) தேஜஸ் — பிறரை வெற்றி கொள்ளும் வல்லமை.

**திருமால் அணிந்த அணிகலன்களின் தத்துவம் :**

1) கௌத்துவம்-புருடதத்துவம்.
2) ஸ்ரீவத்சம்-பிரகிருதி தத்துவம்.
3) கதாயுதம்-புத்தி தத்துவம்.
4) நாந்தகவாள்-தர்மபூத ஞானம்.
5) வாளின் உறை-அஞ்ஞானம்.
6) சாரங்கவில் — சாத்வீக அகங்காரம்.
7) பாஞ்ச சன்யம்-தாமச அகங்காரம்.
8) சுதர்சனம்-அதிசஞ்சலமனம்.
9) பத்து அம்புகள்-பத்து இந்திரியங்கள்.
10) துளசி மாலை-ஐம்பூதங்கள், ஐம்புலங்கள்.

**வைஷ்ணவத்தின் திருமந்திரம் :**

வைஷ்ணவர்கள் சிறப்பாகக் கூறும் மந்திரங்கள் மூன்றாகும். அவற்றை மந்திரத்திரயம் என்பார்கள். அவையாவன :

அஷ்டாட்சர மந்திரம் :

1) "ஓம் நமோ நாராயணுய" என்பது. இதனை எட்டெழுத்து மந்திரம் என்பர். இத் திருமந்திரம் ஒன்றே அனைத்துப் பேறுகளையும் நல்க வல்லது என்பர்.

2) துவைய மந்திரம்: இது இரண்டு அடிகளால் அமைந்திருத்தலின் இப்பெயர் பெற்றது.

" ஶ்ரீமந் நாராயண சரணௌ சரணம்
பிரபத்யே
ஶ்ரீ மதே நாராயணுய நம ."

3) சரமஸ்லோகம் : இது பகவத் கீதையின் இறுதிப்பகுதியில் வருவது.

" ஸர்வ தர்மான் பரித் யஜ்ய மாம்
ஏகம் சரணம் வ்ரஜ |
அஹம் த்வா சர்வ பாபேப்யோ
மோக்ஷயிஷ்யாமி மாசுச: "

இதன் பொருள் யாதெனின் 'இறைவனை விஷ்ணுவை அடைதற்குரிய சாதனங்களை முழுவதும் விட்டு என் ஒருவனையே சரணுகப் பற்று. நான் உன்னை எல்லாப் பாவங்களினின்றும் விடுவிப்பேன் வருந்தாதே' என்பதாகும். பின்னைய இரு மந்திரங்களையும் முறையே ஐயைந்து, நாலெட்டு என்பர்.

**வைஷ்ணவர்க்குரிய சமயக் கடன்கள் :**

வைஷ்ணவன் ஆவதற்கு மேற்கொள்ள வேண்டிய ஐந்து சமயக் கடன்களை வைஷ்ணவ ஆகமங்கள் கூறுகின்றன. அவைகள் 1) தாபம்-திருமாலின் சின்னங்களான சங்கு சக்கரங்களைத் தோள்களில் தரித்துக் கொள்வதாகும். 2) திருபுண்டரம்-நெற்றியிலும், நெஞ்சிலும் திருமண்ணும், சூரமும் கொண்டு நாமமிட்டுக்கொள்வது. 3) நாமம்-கடவுளுடைய அடியார் என்பதைக் காட்டும் பொருட்டு அவனுடைய திருநாமங்களில் ஒன்றுடன் தாசன் என்னும் சொல்லைச் சேர்த்துப் பெயர் கொள்வது. 4) மந்திர உபதேசம்— தீட்சை பெறும்போது குருசெவியில் கூறும் தெய்வீக மந்திரம். 5) யோகம் — வழிபாடு செய்யும் முறை முதலியனவாகும்.

## குத்து விளக்கின் தத்துவம்

| | |
|---|---|
| சிகரமாகிய உச்சிப்பகுதி | சதாசிவன் |
| அதன்மேல் உள்ள பகுதி | மஹேஸ்வரன் |
| நெய் ஏற்றும் அகல்பகுதி | சிவன் |
| தீபம் | சக்தி |
| பிழம்பு | கலைமகள் |
| சுடர் | திருமகள் |
| திரி | பிந்து |
| நெய் | நாதம் |
| நீண்ட நடுப்பகுதி | விஷ்ணுவின் அம்சம் |
| ஆசன அடிப்பகுதி | பிரம்ம அம்சம் |
| குத்து விளக்கு | மும்மூர்த்தி வடிவம். |

திருமதி. கமலா மாரியப்பன்-கோவை.

**வைஷ்ணவ ஆகமங்கள் :**

வைஷ்ணவத்திற்கு இரு ஆகமங்கள் உள்ளன. அவைகள் வைகானஸ ஆகமம், பாஞ்சராத்திர ஆகமம் என்பன. இவ்வாகமங்கள் இறைவனுக்குச் செய்யப்படும் வழிபாட்டு முறைகளிலும், நெறிகளிலும் வேறுபட்டதாகும்.

**வைகானஸ ஆகமம் :**

வைகானஸர் என்பவரால் அருளப் பெற்றதாகும். இவர் திருமாலின் திருமார்பிலிருந்து தோன்றியவர். இவரது மாணுக்கராகிய மரீசி, பிருகு, அத்திரி, காசியபர் எனும் நால்வருக்கும் நான்கு லட்சம் சுலோகம் மூலம் அருளிச் செய்ததே இந்த ஆகமமாகும். திருமலையில் இம்முறை இன்றுவரை செயல்பாட்டில் உள்ளது.

**பாஞ்சராத்திர ஆகமம் :**

இவ்வாகமத்தினைத் திருமால் நாரதர்க்கு ஐந்து இரவுகளில் உபதேசிக்கப்பட்டது என்பர். வேதம் போல இவ்வாகமத்தை அநாதியாக எண்ணுவர். இவ்வாகமத்தை வேதத்தின் முடி என்று பிரசன்ன சம்ஹிதை கூறும். ஶ்ரீ ஆளவந்தார் தமது ஆகமப் பிரமாண்யம் எனும் நூலில் இவ்வாகமத்தின் தொன்மையையும் சிறப்பையும் விளக்கியுள்ளார்.

இவ்வாகமங்களின் துணையைக் கொண்டு (பாஞ்சராத்திராகமம் வைகானஸ ஆகமம்) நூற்றெட்டு திருத்தலங்களில் விளங்கும் ஶ்ரீமந் நாராயணனைப் போற்றி வழிபட்டு வருவது நமது வாழ்வியல் கடமையாகும்.

வைஷ்ணவத்தின் தத்துவார்த்தங்களையும, நெறிமுறைகளையும், சிறப்புக்களையும் வகுத்துத் தந்த ஆச்சார்யர்களின் திருவடியினைப்போற்றி, இறை உணர்வு பெற்று என்றும் இன்பம் நிலவ, திருமாலின் திருவடிகளைப் போற்றி வழிபடுவோமாக.

*

# ஆசிரியர்க்கு....

அற்புதமான பல விஷயங்களைத் தாங்கி வருவது ஸப்தகிரி. கும்பகோணம் ஸ்ரீராமசுவாமி கோவிலில் உள்ள சித்திர விளக்கம் வெளி வந்தது. அதன்மூலம் திருப்புகழில் வாலி தன்னந்தனியாக பாற்கடலைக் கடந்த விவரத்திற்கு ஆதாரம் கிடைத்தது.

ஆனால், சில மாறுபட்ட கருத்துக்களும் வருகின்றன. 1987ம் ஆண்டு நவம்பர் இதழில் பக்கம் 28ல், வால்மீகி முனிவர் 'கிருனு' எனும் முனிவருக்கு ஒரு பெண் நாகத்திடம் வால்மீகி பிறந்ததாக வெளியிட்டிருப்பது ஆதிகாவியத்திற்கும் ஸ்ரீ வியாச பகவான் எழுதிய அத்யாத்ம ராமாயணத்திற்கும் ஒத்து வரவில்லை. 'ப்ரசேதஸ்' முனிவரின் பிள்ளை எனக் கூறும் ஆதிகாவியம். ப்ரசேதஸ் முனிவரின் 10வது பிள்ளை எனத் தன்னைத் தானே அறிமுகம் செய்து கொள்கிறார் ஸ்ரீராமனிடம், குசலவர்களை ஒப்படைக்கும்போது! உள் ஆதாரம் இருக்கும்போது, வெளிக்கதைகளை என்னால் நம்ப முடியவில்லை.

1987ம் ஆண்டு டிசம்பர் இதழில் புலவர் வாரியார்க்கன்பன் சோ. கு. குருசாமி பி. லிட் இராசபாளையம் சொல்லும் 'கருத்து மாறிய கருவூலங்கள்' அற்புதமாக உள்ளன. அவரும் தன்னை அறியாமல் சில கருத்துக்களை மாற்றி உள்ளார். எனக்கும் அவர்க்கும் உள்ள மாறுபட்ட கருத்துக்களை மட்டுமே இங்கு விவரிக்கிறேன்.

**பதினாறும் பெற்று பெரு வாழ்வு வாழ்க:**

ஐந்து இந்திரியங்கள்+ஐந்து ஞானேந்திரியங்கள்+ஐந்துபிராணன்கள்+இவற்றுடன் மனம் சேர்ந்திருப்பதுதான் பதினாறும் பெற்றிருத்தல். இதனைத்தான் லிங்க தேகம் என்பர். உடலில் நுழையும்போது பிறப்பும், உடலைவிட்டு நீங்க இறப்பும் நடக்கிறது. அனைத்தும் குறைவறப் பெற்றவன் இறை ஞானம் பெற்று பெரு வாழ்வு வாழ வேண்டும். இதனைத் தான் ஆதிசங்கரர் 'சதச்லோகி'யில் வற்புறுத்துகிறார். ஸ்ரீமத் பாகவதமும் மற்ற அத்வைத சித்தாந்த நூல்கள் பலவும் 16 எனக்குறிப்பது இதனையே!

**கொன்றால் பாவம் தின்றால் தீரும்:**

மறைவில் ஒருவன் கொலை செய்த பாவம், கொலைகாரனின் மனச்சாட்சியே அவனை அணுஅணுவாகத் தின்று பழி தீர்ப்பதால் தீரும்.

**கரணம் தப்பினால் மரணம்:**

'கரணம்' என்ற சொல்லுக்கு (Concise Tamil Lexicon) சுருக்கத் தமிழ் அகராதியில் கீழ்கண்ட பல பொருள் உண்டு எனக்காட்டப்படுகிறது. 1. தொழில், 2. இந்திரியம், 3. சடங்கு, 4. கூத்துவகை, 5. கருவி, 6. பஞ்சாங்க உறுப்பு ஐந்தனுள் ஒன்று, 7. கணக்கன். ஆகவே, செய்யும் தொழிலில் தவறினாலும், புலன்கள் ஓய்ந்தாலும், சுழற்றும் கருவி தவறினாலும், சடங்கு, கூத்து வகை முதலான பிற தவறுவதால் ஏற்படும் அவமானத்தாலும் மரணம் எட்டலாம். ஆசிரியர் கூறியது சற்றும் பொருத்தமற்ற அபத்தமான அர்த்தமாகும்.

**நீ என்ன பெரிய கொம்பனா?**

யானைக் கூட்டங்களில் தலைமைத் தாங்கிச் செல்வது அதிக நீண்ட கொம்புடைய "கொம்பன்" எனும் யானையே! கொம்பன்-தலைவனையே குறிக்கும். தசரதரது மகள் சாரதையின் கணவராம் கலைக்கோட்டு முனிவரை அல்ல!

**அடி உதவுவதுபோல் அண்ணன் தம்பி உதவான்:**

'அடி' என்பது இறைவனது திருவடி எனக் கொள்வதே சரி. 'கொலையும் செய்வாள் பத்தினி' என்ற பழமொழி உண்டு; ஆகவே 'அடி' என்பது மனைவியை அல்ல; அடி என்பதற்குரிய அர்த்தங்கள் (i) 12" (ii) செய்யுளின் உறுப்பு, (iii) ஆதி, (iv) மூலம் (v) பழமை. (ஆதாரம் Concise Tamil Lexicon).

**சுத்த ரெண்டுங் கெட்டானா இருக்கானே!**

நன்மை தீமை, புண்ணியம் பாவம், விருப்பு வெறுப்பு,...எனும் இருமைகள் அனைத்தையும் விட்டவனே சிறந்த ஞானி ஆகிறான். மனதில் ஆசைகள் அழிந்து மனோநாசம் ஏற்படுகிறது. அவன் இறைவனில் ஒன்றத் தகுந்த 'சுத்த'மானவன் ஆகிறான். "ஆசாநிகளம்துகளாயினபின் பேசா அநுபூதி பிறந்ததுவே" என ஸ்ரீ அருணகிரிநாதர் கூறும் அநுபூதி நிலை பெறும் சுத்த ஞானம் பெற்ற நிலை.

**நூற்றுக்கு ஐந்துதான் தேறும்:**

'ஆறிலும் சாவு நூறிலும் சாவு' என உணர்ந்த கர்ணன் பாண்டவர்களுடன் சேராமல் கௌரவருடன் சேர்ந்ததைக் குறிக்கும்.

நூறு-பொடி, சுண்ணம்பு, அழித்தல், அழைதல், சூழ்தல், துரத்துதல் எனப் பொருள் பல கொண்டது.

நூறு விருப்பங்களில் ஐந்துதான் நிறைவேறும் எனக் கொள்ளலாம்.

நூறு மந்திரங்களில் 5 எழுத்துடைய பஞ்சாட்சரம்தான் மிஞ்சி நிற்கும் எனவும் கொள்ளலாம்.

ஆழமாக யோசித்தால் இன்னும் பற்பல பொருட்கள் கொள்ளலாம். கௌரவர்கள் நூறு பேரும் பீமன் கையால் மடிந்ததால் நூறு பேரில் ஒருவர்கூட மிஞ்சவில்லை எனக்கூறும் பாரதம். ஆசிரியர் கொண்ட பொருள் தவறு.

என் மறுப்புகளையும் விளக்கங்களையும் அன்பர்களின் நன்மைக்காக வெளியிடுங்கள்.

அன்புள்ள,

சத்தியமூர்த்தி— திண்டுக்கல்.

# திருமணச் சடங்குகளின் தத்துவங்கள்

திருமணமானது ஒரு சுப, மங்கள கரமான நற்சடங்காகும். அதன் மூலம் குடும்ப பாரமென்னும் பெரிய பொறுப்பை வகிக்க ஆரம்பிக்கிறோம். திருமணத்தில் சில சடங்குகள் நியமிக்கப்பட்டுள்ளன. அவைகளின் சிறப்பைப்பற்றித் தெரிந்து கொள்வோம். விரதம், காசி யாத்திரை, விவாகம், வரப்பிரேக்ஷணை, கன்னிகா தானம், திருமாங்கல்ய தாரணம், பாணிக்கிரஹணம், ஸப்தபதி, லாஜ ஹோமம் (பொறி இடுதல்) ஜெயாதி ஹோமம், பிரவேச ஹோமம், ஸ்தாலிபாகம், கந்தர்வ பூஜை, க்ஷே ஹோமம் போன்ற நிகழ்ச்சிகள் சடங்குகளாக, ஒன்றன்பின்ஒன்ருக அநுஷ்டிக்கப்பட்டு வருகின்றன. அவற்றினுள் பொதிந்திருக்கும் தத்துவங்கள் வெகுச்சிறப்பு வாய்ந்தனவையாகும்.

உபநயனமானதும், பிரம்மச்சர்ய ஆஸ்ரமத்தைக் கடைபிடிக்கிற ஒருவனுக்கு, பிரம்மச்சர்ய ஆஸ்ரமத்துக்கும் கிரகஸ்தாஸ்ரமத்துக்கும் மத்தியிலுள்ள 'ஸ்நாதகன்' என்ற நிலை ஏற்படுகிறது. அந்த நிலையில் அவன் 'விரதம்' என்ற சடங்கை ரிஷிகள், பிதுர்க்கள் பிரீதிக்காகச் செய்கிருன். அப்போது அவனேற்கும் நிலைக்கு 'சமாதர்த்தனம்' என்று பெயர். பாதரட்சை அணிதல், குடை பிடித்துக் கொள்வது, கண்ணுடி பார்த்துக் கொள்வது, சந்தனம் பூசிக் கொள்வது, பட்டாடைகளணிதல், சோபன காரியங்களை ஏற்றுக்கொள்வது போன்றவற்றிற்குத் தகுதிபெறுகிருன். இவற்றிற்கு மந்திரம் கூறப்பட்டிருக்கிறது. இந்நிலையில் தான் கிரகஸ்தாஸ்ரமம் பிரவேசிப்பதா, இல்லையா என்று தீர்மானிக்கிருன். 'விரதம்'பண்ணிவிட்டால் கல்யாணம் செய்துகொண்டுதானுக வேண்டும் என்று நிர்ப்பந்தம் கிடையாது!

அடுத்ததாகக் காசியாத்திரை. உண்மையாகவே விரதம் முடித்துக் கொண்ட அவன் ஞான மார்க்கத்தையடைய காசியாத்திரையை மேற்கொள்கிருன். விவாகம் செய்து கொண்டு, குடும்ப பாரம் வகிக்கத் தனக்கு யோக்யதையிருக்கிறதாவென்று ஆப்த நண்பர்களிடமும், பெரியோர்களிடமும் ஆலோசித்தறிகின்ருன். தான் காசி யாத்திரை செல்ல அவர்களின் அநுமதியையும் கேட்கிருன். அப்போது பெண்களைப் பெற்று மணப்பருவத்திலுள்ள கன்னிகைகளைவளர்த்துக்கொண்டிருப்போர்களில் ஒருவர் முன்வந்துத் தன் கன்னிகையைக் கொடுப்பதாகவும் அவளுடன் இல்லறம் நடத்தும்படியும் கேட்பார்கள் என்று ஓர் ஐதீகம்!

அடுத்து வருவது விவாகம். மனமொருமித்து மணமகனும், மணமகளும் ஒருவரையொருவர் பார்த்துக் கொள்வர். பின்னர் தத்தம் அம்மான் (மாமா) தோளில் ஆரோகணித்துக்கொண்டு 3 தடவைகள் மாலை மாற்றிக்கொண்டபின், ஊஞ்சலாடு கையில், 'பச்சைப் பொடி' சுற்றுதல் நடைபெறும். சாதத்தைப் பந்து போலாக்கி, மஞ்சள், குங்குமம் கலந்து, அவர்களைச் சுற்றி, நான்கு திசைகள், ஆகாயம், பூமி இவற்றில் எறிவார்கள். இதில் இருசாரர்களின் உறவினர்களும் பங்கேற்பார்கள். பின்னர் தண்ணீரில் மீதத்தைக் கரைத்துக் கொண்டு, பூர்ண கும்பம், தீபம், ஹாரத்தி முதலியவற்றுடன் மணமக்கள் வலம் வருவார்கள். அவர்களுக்குப் பாலும் பழமும் கொடுத்து அவர்களைத் திருமண மண்டபத்துக்கு அழைத்து வருவார்கள். மங்கள வாத்தியங்கள் இன்னிசையும் வேத மந்த்ரங்களின் ஒலியும், குழுமியுள்ள உற்ருர், உறவினர், நண்பர்களின் ஆரவாரமும் ஏற்படுத்தும் 'களை'யே ஒரு தனிச் சிறப்பாகும்!

இதைத் தொடரும் நிகழ்ச்சியில் மணமகள் - மணமகன் இவர்களின் குலம், கோத்திரம் போன்றனவற்றைக் கூறுவார்கள். இது 'வரப் பிரேக்ஷணை' எனப்படும். கன்னிகையைக் கொள்ள வந்திருக்கும் மணமகனை ஸ்ரீமகாவிஷ்ணுவின் அம்சமாகக் கருதிப் பெண்வீட்டார் உபசரணைகள் செய்து பூஜிப்பர். தன் குல கோத்திரங்களையும். மூன்று வம்சா வழிகளையும் கூறுவர். இதைப் போலவே மணமகனின் குலம் கோத்திரங்கள், மூன்று வம்சாவழிகளையும் கூறுவர். இதைப் போலவே மணமகளின் குலம் கோத்திரங்கள் மூன்று

மயூரப்ரியா

வம்சா வழிகளையும் சொல்லி, அவருக்கு இந்த கன்னிகையை (கன்னிகா) தானம் செய்வதாகக் கூறுவர். இதற்கு மந்த்ரமுண்டு. , சபையோர் ஆமோதிப்பதற்கான இது ஒரு சடங்காகும்.

இனி வரும் நிகழ்ச்சியே கன்னிகா தானம் எனப்படும் வைபவமாகும். மணப்பெண்ணின் தந்தை, விதைக் கொட்டை, நெல் வைத்து வைக்கோலால் கட்டப்பட்ட ஒரு மூட்டையிலமர்ந்து கொண்டு, தன் மடியில் பெண்ணைக்கிழக்கு நோக்கிஅமர்த்திக் கொண்டு, எதிரில் தன்னை நோக்கியுள்ள மணமகனிடம் கன்னிகா தானம் செய்கிருர். மணமகளின் கையில் தேங்காய், பழம், தக்ஷிணையுடன் பெண்ணின் தாயார் வடக்கு நோக்கியிருந்து (தாரை) நீர் வார்க்க மணமகன் கன்னிகாதானமேற்கிறதாக தத்துவம். தானமளிப்பவர்

# உபநிஷதம் கூறும் உண்மை

பாரத யுத்தம் முடிவுற்ற நேரம் அது. ஆச்சாரியார் பீஷ்மர் தரும புத்திரனிடம் தரும நெறிகளைப் பற்றி விளக்கம் அளித்துக் கொண்டிருந்தார். அருகிலிருந்து அவைகளைக் கேட்டுக் கொண்டிருந்த திரௌபதியின் தேகம் கொதித்தது. 'வணக்கத்துக்குரிய ஆச்சாரியார் அவர்களே! தர்ம நெறிகளைப் பற்றி இத்துணை அழகாகப் பேசும் தாங்கள், துரியோதனனும் துச்சாதனனும் என் துகிலைக் களையும் போது வாய்மூடி மௌனம் கொண்டிருந்தீர்களே, ஏன்? அன்று எங்கே போயிருந்தது இந்த தரும போதனை? என்று கோபமுடன் கேட்டாள்.

பீஷ்மர் பதில் அளித்தார்.

"மகளே! நான் துரியோதனன் இடும் உணவை உண்டு வருகிறவன். அத்தீயவனின் அன்னம் என் நல்லறிவை நசித்துவிட்டது. அவன் எய்திய அம்புகள் இன்று என் உடல் எல்லாம் புகுந்து ஒரு சொட்டு ரத்தம்கூட எஞ்சியிராமல் சுத்தமாகத் துடைத்துவிட்டது. எனவே என் இயற்கை குணம் தலை தூக்குகிறது. என்னால் அறநெறிகளை சிந்திக்க முடிகிறது. அவைகளைப் பற்றி பேச முடிகிறது."

நாம் உண்ணும் உணவில் மூன்றில் ஒரு பாகமானது நம் உள்ள மாற்றத்துக்குக் காரணமாகிறது என்று சாந்தோக்ய உபநிஷத் கூறுகிறது.

ஸ்ரீ விஸ்வேஸ தீர்த்த சுவாமிஜி.

தகவல்: **ஆர். சுப்பாராவ்-திருக்கோவலூர்.**

இரண்டு கைகளாலும் கொடுப்பதும் தானம் பெறுபவர் ஒரு கையால் பெறுவதுவே முறையாம்.

தேவர்கள், உற்றார் உறவினர்கள், அக்னி சாட்சிகளாகக் கொண்டு, ஸ்ரீ விஷ்ணுவின் பிரதிநிதியான வரனிடம் கன்னிகாதானமளிக்கப்படுகிறது எனலாம். இதனால் மோக்ஷ சித்தி ஏற்படுவதுடன், குடும்பப் பொறுப்பை ஏற்றுக்கொள்ள அங்கீகாரம் பெறுவதும் இதன் கருத்து. தேன், பால், பழம் இவற்றைக் கலந்த மது வர்க்கத்தை பெண்ணின் தாயார் அருகிலிருக்க அவள் தகப்பனார் மாப்பிள்ளைக்களிக்கும் முறையுமிருந்ததுண்டு. பெண்ணின் தலையில் நுகத்தடி வைத்து, சகல பாபங்களும் நிவர்த்தியாக வேண்டியும் தம்பதிகள் ஒற்றுமையைக் குறித்தும் பிரார்த்தித்துக் கொண்டு மணமகளுக்குப் புதுப்புடவையணிவித்து, அடுத்த கட்டமாகத் திருமாங்கல்ய தாரணம் (தாலியணிவித்தல்) நடைபெறும்.

தன் தகப்பனாரின் மடியில் கிழக்கு நோக்கி அமர்ந்திருக்கும் கன்னிகையின் எதிரில் மணமகன் நின்று கொண்டு, அவள் கழுத்தில் "மாங்கல்ய தந்துநாநேன மம ஜீவன ஹேதுனா, கண்டே பத்னாமி சுபகே த்வம் ஜிவ சரதஸ்சதம்"என்ற சுலோகத்தைக் கூறி திருமாங்கல்ய தாரணம் செய்கிறான். (இதைத் தரித்துக் கொண்டு நீயும் நானும் சுகஜீவிகளாக வாழ்க்கையை நடத்துவோம் என்பதே இதன் கருத்தாகும்) முப்பிரியால் திரிக்கப்பட்ட தர்ப்பைக் கயிற்றை மணமகளின் இடுப்பில் மந்திரத்துடன் கட்டி, அதனை முகூர்த்தக் கடைசியில் மந்திரத்துடனே அவிழ்ப்பார்கள். நல்வாழ்வமையட்டும் என்பதே கருத்து. பின்னர் அக்னி முன்னால் தம்பதிகள் பட்டுப் பாயிலமர்ந்து கொள்ள, ஹோமம் நடக்கிறது. அதற்குரிய மந்திரமாவது,"பெண்ணே!இதற்கு முன்பு சந்திரன் ஆதரவிலும், கந்தர்வ ஆதரவிலும், பின்னர் அக்னி ஆதரவிலும் இருந்து வந்து என்னை வந்தடைந்துள்ள உன்னை அக்னி சாட்சியாக ஏற்றுக் கொள்கிறேன். நாம் சகல சௌபாக்கியங்களையும் பெற்று இணை பிரியாமல் இல்லற வாழ்க்கையை நடத்துவோமாக!" என்று பொருள்படும். தாலியைக் கழுத்திலணிவித்து மணமகன் ஒருமுடிச்சும் அவன் சகோதரிமேலும் இரண்டு முடிச்சுகளும் போடுவதே சம்பிரதாயமாகும்.

அடுத்து, பாணிக்கிரஹணம் என்ற நிகழ்ச்சியில் மணப்பெண்ணின் வலது கை ஐந்து விரல்களையும் குவித்த முறையில் சேர்த்து மணமகன்பிடித்தலாகும். மாப்பிள்ளையின் கைமேலேயும் பெண்ணின் கை அதில் அடங்கியுமிருத்தலே முறை. நல்ல புத்திரர்களைப் பெறுவதற்கும், தேவர்களும் ரிஷிகளும், பிதுர்க்களும் மகிழ்ச்சியடைவதற்குமே ஏற்பட்ட நிகழ்ச்சியாகும். சூரியன், சந்திரன், இந்திராதி தேவர்கள், சரஸ்வதி, லக்ஷ்மி, இந்திராணி ஆகியோரும் மகிழ்ச்சியடைந்து மணமக்களின் இல்லறவாழ்வுக்கு ஆசிபுரிகிறார்கள். ஸ்ரீமத்ராமாயணத்தில் தசரதன் குலமும் ஜனகனின் குலமுந்தழைத்தோங்க உதவட்டுமென்ற கருத்தில் "இயம் சீதாமமசுதா" என்ற ஸ்லோகத்தின் மூலம் சீதாபிராட்டியின் கையை ஸ்ரீராமன் பற்றின வரலாற்றை வால்மீகி தெளிவு படுத்தியுள்ளார்.

அடுத்து வருவது 'சப்தபதி' என்பது மணப்பெண்ணின் வலது காலை, மணமகன் இடது கையால் பிடித்து ஒவ்வொரு அடியாக ஏழு அடி தூக்கி வைத்தலேயாகும். "காற்று, மழை முதலிய பருவநிலைகள் உதவுவதற்கும், பயிர்பச்சைகள் செழித்தோங்கித் தான்யங்கள் அபரிமிதமாக வளர்

வதற்கும் விரதாதிகள் நடப்பதற்கும், நோய் நொடியின்றிச் சுகவாழ்வுபெறு வதற்கும், பசுக்களின் செழிப்புக்கும், ருதுக்களின் அநுகூலத்திற்கும், ஸப்த ரிஷிகளின் அருளாசிககும் உதவுவ தாக உன்வரவு இருக்கட்டும்'' என்ற தத்துவத்தில் ஏழு அடிகள் எடுத்து வைக்கப்படுகின்றன! இணைபிரியாத இல்லற வாழ்க்கை இதன் மூலம் அமையமுடியுமென்று சப்தபதி தெரி விக்கிறது.

அக்னியின் முன்னுலமர்ந்திருக்கும் தம்பதியரின் அடுத்த செயல் லாஜ ஹோமம் ஆகும். பெண்ணின் சகோ தரன் நெல்பொறியை எடுத்து இரண்டு தடவை பெண்ணின் இரு கைகளிலும் போட, அதனை மணமகன் மணமகளின் கையைப் பிடித்துக் கொண்டு அக்னியில் சேர்க்க வேண் டும். சூரியனை உத்தேசித்து செய்யப் படும் இச்சடங்கு, சூரியப்பிரகாசம் போல் தன் கணவன் சகல கீர்த்தி யுடன் ஒளிமயமான வாழ்வைப் பெற வேண்டுமென்று மணமகள் பிரார்த் திக்க, சூரியனுடன் இணைபிரியாத சாயாதேவியைப் போன்றுத் தாமும் மிகவும் ஒற்றுமையாயிருந்து வாழ்க் கையை நடத்த வேண்டுமென்று மண மகனும் பிரார்த்திக்கிறதான ஐதீகம். அக்னியில் பொறியையிட்ட பின்பு, தம்பதிகள் கையைப் பிடித்துக் கொண்டு அக்னியை வலம் வருவார் கள். இம்மாதிரி மூன்று முறைகள் செய்வார்கள். இதுவே சப்தபதியின் அடுத்த கட்டம்.

இந்த ஹோமத்துக்குப் பிறகு, சில கந்தர்வர்கள், அவர்களின் மனைவி மார்கள், சில தேவதைகளின் பிரீதிக் காக ஏற்பட்டது ஜெயாதி ஹோமம் என்பர்.

புதுமணத் தம்பதியரைப் பெரி யோர்கள், வைதீகர்கள் போன் ேரார் மந்திரங்கள் மூலம் அட்சதை போட்டு ஆசி கூறுவர். பின்னர் ஹாரத்தி சுற்று வார்கள். ஔபாசனப் பானையுடன்

## ஓங்கும் பெருவீடு கண்டுகொண்மின்

திரு. டி. நவநீதகிருஷ்ணன்-போடிநாயக்கனூர்.

பொல்லா வுடம்பும் புழுக்குழு முன்னம்நீ
நல்லார் தொழும்நாமம் நாவேத்தாய்!—வல்லான்
திருவேங் கடத்தான் திருப்பாத நீழல்
விரும்பாய் மடநெஞ்சே யின்று!

இன்றும் வயதேறித் தீக்கா டடையாமுன்
நின்று நிலமளந்தா னெண்ணுமம்—நன்றே நீ
யேத்தாய்! திருவேங் கடத்தே யுறைவானை
நாத்ததும்ப யின்றே நினைந்து!

நினைந்து நினைந்து நெடுநா ளகன்று
வினைவாய்ப் படாமுன் விழைவாய்!—கனைவாய்க்
களிறெல்கும் வேங்கடத்தான் நன்னுமம் கண்டு
தளிர்நாவா லேத்தித் துதி!

துதியாதே தொல்வினையாற் றீயாமுன் னன்றே
கதியாவான் றன்னையே கொண்மின்!—பதியாய்த்
திருவேங் கடத்தே யுறைவானை யுன்னி
பெருமூச் செறியப் படி!

படியாப் புலன்வழிப் பட்டுழலா தின்றே
அடியா ரிடைப்புகுமின் ஞய்ந்து!—நெடுவரை
வேங்கடத்தான், மின்னூர் திருப்பாதத் தும்மையே
ஆங்கிடத்த போழும் வினை!

வினையின் விளைந்த வுடலம் வருந்தி
கனற்கால்மண் நீர்வெளியாய்க் கங்குற்—புனலிடை
வீழாமுன் வேங்கடத்தான் செம்பாதம் பற்றுய்நீ!
மாழாப் பெருவலி மாய்த்து!

மாய்ந்தும் பிறப்பறுக்க மாட்டாதீர்! எங்ஙனே
ஆய்ந்த பெருவளியா யாவீர்கொல!—பாய்ந்தரற்றும்
தொல்நீர்பாய் வேங்கடத்தான் பொற்பாதந் தேடுவீர்,
வல்ல பொறிவா யொழித்து!

ஒழிவிலாக் காலத்தே வூழிற் புதைந்து
வழிப்பிண மாவீர்காள்! வம்மின்!—இழிதருந்
தெண்ணீர்த் திருவேங் கடத்தாய னெண்பாதம்
எண்ணீரே லஃதொப்ப தில்!

இல்லாளின் வேற்கண்ணில் வீழ்ந்திறப்பீ ரந்தந்தோ!
பொல்லாதாய்ப் பற்றறுமின்! மாநிலத்தே!—பல்லுயிரின்
தாயாய்ப் பரிந்தேற்கும் புண்ணியன் றேர்நாமம்
ஓயா துரைப்பீர் விரைந்து!

இறையாய்வெங் காலனுக் காட்பட்டீர்! இன்னே
புரைவிட்டுப் புல்லப் புகுமின்!—விரைதுளப
வேங்கடத்தான் செம்பாதம் போற்றி வரிப்பீரேல்
ஓங்கும் பெருவீ டது!

மணப்பெண்ணை அழைத்துக்கொண்டு மணமகன் இல்லம் அடைகின்றனர். சில மந்திரங்களுடன் செய்யப்படுவது பிரவேச ஹோமம் எனப்பட்டது. அதன் பின் இரவு கிழக்கு அல்லது வடக்கு நோக்கி ஆகாயத்தில் துருவ நட்சத்திரம், அருந்ததி நட்சத்திரம் பார்த்து தரிசனம் செய்வதன் மூலம் கீர்த்தியும், கற்பின் திறனும் வாய்க்கப் பெறுகின்றனர். அவர்கள் துருவ, அருந்ததி தரிசனம் செய்யும் வரையில் தம்மிடை பேசக் கூடாது!

ஹோம அக்னியில் மணப்பெண் தன் கையால் அரிசியைப் போட்டுக் கொதிக்க வைத்த அவிசு தான் ஸ்தாலிபாகம் எனப்படும். இந்த அவிசை மந்திரத்துடன் ஹோமம் செய்யவேண்டியது அவசியம். அமாவாசை, பௌர்ணமி பருவ காலங்களில் ஸ்தாலிபாகம் செய்துவர வேண்டுமென்றும் காலை மாலையில் கிரகஸ்தன் ஔபாசனம் செய்துவர வேண்டுமென்று விதிக்கப்பட்டிருக்கிறது.

மணமான மூன்று நாட்களில் மணமக்கள் கடைப்பிடிக்க வேண்டியவை உப்பு, உறைப்பில்லாத ஆகாரமே உட்கொள்ளல், விரிப்பேதுமில்லாமல் தரையிலேயே படுத்தல், பிரம்மச்சர்ய விரதம் அநுஷ்டித்தல் என்பன. தம்பதிகளுக்குக் காவலாக, அத்தி, புரசு அல்லது அரசம்குச்சியில் கந்தர்வதேவதையை ஆவாகனம் செய்து இவர்களின் மத்தியில் சாட்சியாக இருக்கச்செய்வார்கள்! ஆவாகனம் எப்படிச் செய்வார்களென்றால், மணமகன், மணமகள் இவர்களின் ஆடையிலிருந்து நூல்களெடுத்து அக்குச்சியில் கட்டி, மந்திரங்கள் கூறி ஆவாகனம் செய்து சகல உபசாரங்களையும் செய்து அக்குச்சியை நான்காம் நாள் அதிகாலை சேஷஹோமம் வரை தம்பதிகளிடை இருக்கச் செய்து, சேஷஹோமம் ஆரம்பிக்குமுன் இக்கந்தர்வ தேவனை 'யதாஸ்தானம்' பண்ணி அவனிருப்பிடத்துக்கு அனுப்பி விடுவது வழக்கம்! எவ்வளவு கட்டுப்பாடு!

விவாக நான்காம் நாள் இரவிலும் மறுநாள் உதயத்திலும் பாக்கி ஹோமங்கள் செய்யப்பட்டும் பூர்த்தி பெறப்படும். இதுவே 'சேஷ ஹோமம்' ஆகும். இந்த ஹோமம் முடிவில் மிஞ்சியுள்ள நெய்யில் சிறிதளவு எடுத்துக்கொண்டு மணமகளின் சிரஸில் நான்கு முறை ஆகுதி செய்ய வேண்டுமென்பர். நல்ல சத்சந்தானப்பிராப்தி ஏற்படவேண்டுமென்பதே இதன் நோக்கம். தம்பதிகள் மனமொருமித்து இணை பிரியாமல் நல்வாழ்க்கை நடத்த ஒருவரையொருவர் பார்த்துக் கொள்வர். இதன் காரணமாகக் கட்டைவிரலைத் தன் நெஞ்சிலும் ஆள்காட்டி விரலை மணமகள் நெஞ்சிலும் மந்திரபூர்வமாக வைத்துச் சொல்வர். மைத்துனர் தாம்பூலம் கொடுக்க மணமகன் அதனை ஏற்றுக்கொள்வான். இறுதியில் பலதானம் கொடுப்பது, ஹரிஹர ஆச்சார்ய சம்பாவனை செய்தல், சபையிலுள்ளோரனைவர்க்கும் சந்தனம் தாம்பூலம் வழங்குதலுடன் ஆரத்தி எடுத்தபின் விவாகச் சடங்குகள் பூர்ணமாக நிறைவேறுகின்றன!

விவாகச் சடங்குகளைக் கண்டு களித்த நாமும் மனநிறைவுடன் மணமக்களை வாழ்த்திவிட்டு வீடு திரும்புகிறோம்!

# தூங்கானை மாடம்

தூங்கானை மாடம் என்பது, திருப்பெண்ணாகடம் என்னும் திருத்தலத்தில் உள்ள இறைவன் திருக்கோயிலாகும். இங்குள்ள கோயிலின் முன்புறம் யானையின் முகம் போலுயர்ந்தும் பின்புறம் யானையின் பின்பாகம் போலப் பருத்து வட்டவடிவமாயும் அமைந்துள்ளது. இதன் காரணத்தால் இப்பெயர் ஏற்பட்டது என்று தெரிய வருகிறது. இதிலிருந்தும் 'தான் தோன்றி மாடம்' என்று வழங்கும் பிற சொற்களிலிருந்தும் அன்று இறைவனுடைய திருக்கோயில்களை பெயரிட்டு அழைத்து வந்தனர் என்றும்,குறிப்பாக 'மாடம்' என்ற சொல் அவற்றுள் ஒன்று என்றும் தெரிய வருகின்றது. இத்தலத்துறையும் இறைவனை 'நீடுதிருத் தூங்கானை மாடத்து நிலவுகின்ற வாடகமே' என்ற அடியினைக் கொண்ட பாடல் மற்றும் பிற பாடல்களைக் கொண்டு திருநாவுக்கரசு நாயனார் பாடித் துதித்துள்ளார். இத்திருக்கோயிலை 'கடந்தைத் தடங்கோயில்' எனக் குறிக்கின்றது பிள்ளையார் தேவாரம். இத்திருத்தலத்து நாயகியின் பெயரான 'கடந்தை நாயகி' என்னும் பெயரைக் காரணமாகக் கொண்டு மேற்படி பெயரும் ஏற்பட்டிருக்கலாம். இங்கு கருப்பக் கிருகத்தினைச் சுற்றி மூன்று சாளரங்கள் அமைந்துள்ளது இத்திருக்கோயிலின் சிறப்பாகும். இத்தலம் அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவரான 'கலிக்கம்ப நாயனார்' பேறு பெற்ற தலமாகும் என்பர். மறை ஞான சம்பந்தர் அவதரித்த தலமுமென்பர். இத்தலத்தில் வைத்துதான் திருநாவுக்கரசு நாயனார் வேண்டியபடி அவருடைய தோளில் சூலமும், இடபமும் இறைவனால் பொறிக்கப்பட்டதாக புராண வரலாறு கூறுகின்றது. இங்குள்ள இறைவன் திருநாமம் 'சுடர்க்கொழுந்து நாதர்' ஆகும். இத்தலம் தமிழ்நாட்டில் திருச்சி-சென்னை இருப்புப் பாதையில் விருத்தாசலத்திற்குத் தென் மேற்கில் பெண்ணாடம் நிலையத்தருகே அமைந்துள்ளது.

ஆதாரம்: திருநாவுக்கரசு நாயனார் புராணம்.

தொகுப்பு: முடிவை முத்து.

# பெரியாழ்வார்

சம்சாரக் கடலில் மூழ்கி கரை சேர முடியாது தத்தளிக்கும் சம்சாரிகளைக் கரை சேர்க்க, எம்பெருமான் சாஸ்திரங்களைக் காட்டியருளினன். கர்ம வினையால் கட்டுண்டுக் கிடக்குமவர்களாகையால் இச்சாஸ்திரங்களில் நாட்டங்கொள்ளவில்லை. கிணற்றிலே தவறி விழுந்த தன் குழந்தையை மீட்கத் தானும் கிணற்றிலே குதிக்கும் தாயைப் போல் இப் பாரினில் இராமனும் கிருஷ்ணனும் தன் மேன்மை விடுத்து, எளிமை பிரகாசிக்கத் தோன்றுகிறன். தன் வடிவழகாலும், செயலாலும், உபதேசத்தாலும், மேலும் தன் வீரத்



தைக் காண்பித்தும் அவர்களைத் திருத்திப் பணிகொள்ள முனைகிறன். இதுவும் பலனளியாதது கண்டு சம்சாரிகளில் ஒருவனைக் கொண்டே அவர்களைத் திருத்திப் பணிகொள்ளத் திருவுள்ளம் கொள்ளுகிறன். அதன் காரணமாய், தன் வாஹனமான கருடாழ்வானையும் மற்றும் தன் திவ்ய ஆயுதங்களையும் ஆழ்வார்களாகத் தோன்றும்படி நியமனம் செய்தான் போலும்! எம்பெருமானுடைய மங்கள குணங்களாகிற கடலிலே மூழ்கி அமிழ்ந்து திளைத்தவர்களாகையாலே இவர்கள் ஆழ்வார்கள் எனப்படுகின்றனர். கடுந்தவம் போன்ற தன் கடும் முயற்சியால் அவனைக் காண விழையும் ரிஷிகள் போலன்றி அவனே வந்து தன்னைத் தானே காட்டிக் கொடுத்து அவர்களுக்கு மயர்வற மதிநலம் அருளினன். அவ்வாறன ஆழ்வார்கள் பதின்மரில் பட்டர்பிரான் எனப் போற்றப் பெறும் பெரியாழ்வாரும் ஒருவர்.

பண்டைப் பெரும் புகழ்படைத்த பாண்டிய நாட்டிலே சீரும் சிறப்பும் கொண்ட ஸ்ரீ வில்லிபுத்தூர் என்னும் நகர் தன்னில் நான்கு மறைகளும் கற்றுணர்ந்த வேயர்குலச் சீலனை முகுந்த பட்டர் அவர் மனைவி பத்மா என்னும் திவ்ய தம்பதியருக்கு ஆழ்வார் குமாரனய்த் தோன்றினர். கருடாழ்வானின் அம்சமாய் ஆனி மாதம் சுவாதி நக்ஷத்திரத்தில் தோன்றிய இவருக்குப் பெற்றேர் இட்ட பெயர் விஷ்ணுசித்தர் என்பதே. தன் தகப்பனரிடமிருந்தே வேத சாஸ்திரங்களைக் கற்றுணர்ந்தார். தக்க கன்னிகையைப் பெற்றேர் உகக்க மணந்து கொண்டு இல்லற தர்மத்தை இனிதே நடத்தி வந்தார்.

"உனக்குப்பணி செய்திருக்குந் தவமுடையேன் இனிப் போயொருவன் தனக்குப் பணிந்து" (பெரியாழ். திருமொழி 5-3-3) எனத் தாமே யருளியவாறு 'எம்பெருமானே! உமக்கு ஊழியம் செய்து கொண்டிருக்கையாகிற உனது பெருங்கருணையைப் பெற்றிருக்கிற நான் வேறெருவனிடம் சென்று அடிமை புரிய மாட்டேன்' என்னும் மனவுறுதி படைத்தவர் ஆழ்வார். ஆகவே, ஸ்ரீ வில்லிபுத்தூரிலே கோயில் கண்ட வட பெருங் கோயிலுடையானுக்கே மலர் மாலை சாத்தி மகிழ்ந்திருப்பார்.

"உண்ணுநாள் பசியாவதொன்றில்லை
ஓவாதே நமோ நாரணவென்று
எண்ணுநாளும் இருக்கெசுச்சாம
வேதநாண் மலர்கொண்டு
உன பாதம்
நண்ணுநாள் அவைதத்துறு மாகில்
அன்று எனக்கு அவைபட்டினி
நாளே."

(பெரியாழ். திரு. 5-1-6) என்று தாம் அருளியவாறு உண்ணுமல் ஒரு நாள் இருந்தாலும் பசி என்பது அவருக்கு ஏற்படுவதில்லை. ஒய்வொழிவின்றி "நமோ நாராயணுய" என அரற்றுத நாட்களும், ருக் யஜுர் சாமவேத வாக்யங்கள் கொண்டு அன்றலர்ந்த நறுமண மிக்க மலர்களைக் கொண்டு அவன் திருவடிகளில் பணி மாறிப் பணிந்திடாத நாட்களும் அவருக்குப் பட்டினி நாட்கள். இவற்றிற்கு என்றேனும் குந்தகம் ஏற்படின் அன்றும் அவருக்கு உபவாஸ தினமே! "நெய்யிடை நல்லதோர் சோறும் நியதமுமத்தாணிச் சேவகமும்" (திருப்பல்லா. 8) என்றும் அகலாது எம்பெருமானுக்குச் செய்யும் சேவக விருத்தியும், அவன் கண்டருளிய நெய் நிறைந்த பிரசாதமும் தாரக போஷகங்களாக ஆழ்வார் உகப்புக்குரிய தாயிற்று.

'வில் விழா'வெனச் சொல்லி அக்ரூரரை விட்டு கிருஷ்ணனையும் பலராமனையும் மதுரைக்குக் கூட்டி வரச் செய்தான் கம்ஸன். தன்னைக் கொல்

**திரு. வி இராகவன்-பள்ளத்தூர்.**



திருபுவனம் திருக்கோயில்,
டாக்டர். வி. காமேஸ்வரராவ் - திருப்பதி.

னும் கம்ஸனின் முயற்சிகளில் இதுவு மொன்று என்று கண்ணன் அறிந்திருந்தான். 'வீரலெக்ஷ்மி' தன்னுடன் இருக்க, தன் மார்பில் வெற்றிக்குரிய வாகை மாலை சூடாது செல்வது பொருந்தாது என நினைத்தான் போலும்! ராஜ வீதியில் கம்ஸனுக்கு நல்ல மாலைகள் தொடுத்துக் கொடுக்கும் மாலாகாரரைச் சந்தித்தான். அவனை நல்லதொரு மணமிக்க மாலை கட்டித் தரச் செய்து மார்பிலே யணிந்துகொண்டு விழாவிற்குச் செல்கிறான்! இவ்விருத்தாந்தமே ஆழ்வாரை நந்தவன கைங்கர்யம் செய்யச் செய்தது போலும்! "செண்பக மல்லி கையொடு செங்கழு நீரிருவாட்சி, எண்பகர் பூவும் கொணர்ந்தேன்" (பெரியா. திரு. 2-7-10) எனப் பெருமிதம் கொள்ளும்படி செண்பகம், மல்லிகை, பாதிரி, மருதமனகம், செங்கழுநீர், புன்னை, இருவாட்சி, கருமுகை ஆகிய மணமிக்க மலர்கள் பூத்துக் குலுங்கும் வண்ணம் நந்தவன வமைத்துப் பராமரித்தும் வந்தார்.

பாண்டிய மன்னனாகிய வல்லப தேவன் ஓரிரவு நகர சோதனைக்காகச் சென்றான். ஓர் வீட்டுத் திண்ணையில் ஒருவன் படுத்துத் தூங்குவதைக் கண்ணுற்றான். அவனையெழுப்பி நீ யார் யென வினவினான். 'நான் ஓர் பிராமணன். கங்கை நீராடி மீண்டு வருகிறேன்' எனச் சொல்லுகிறான். உமக்குத் தெரிந்த நீதி வாக்கியம் ஒன்று சொல்லும் என அரசன் கேட்கிறான். 'மாரிக் காலத்தில் நிம்மதியாய்க் காலம் கழித்திட மற்றுமுள்ள எட்டு மாதங்களும் பாடுபட வேண்டும். இரவு இனிமையாகக் கழிந்திட பகலில் நன்கு உழைத்திடல் வேண்டும்; வயோதிகத்தில் சிரமப்படாதிருக்க வாலிபத்தில் நன்கு பாடுபட வேண்டும். மறுமையில் இன்புற இப் பிறவியில் முயல வேண்டும்' என்னும் கருத்துப்பட,

வர்ஷார்த்தஅஷ்டௌ ப்ரயதேத மாஸாந்
நிஸார்த்தமர்த்தம் திவஸம் யதேத |
வார்த்தக்ய ஹேதோர் வயஸா நவே ந
பரத்ர ஹேதோரிஹ ஜந்மநா ச ||

இச்சுலோகத்தைப் பாடினான். 'இம்மையில் நாம் எல்லா பாக்யங்களும் பெற்றிருக்கிறோம். ஆயினும் மறுமைக்கு இதுவரை யாதொன்றும் செய்யவில்லையே' என்றும் வாதனை அவன் உள்ளத்தை வாட்டியது. அரசியல் விவேகியும் வேதாந்த விற்பன்னரும் அமைச்சருமான செல்வ நம்பி, ஏதும் சொல்லாது நாட்டிலுள்ள வேத விற்பன்னர்களைக் கொண்டு பரத்துவ நிர்ணயம் செய்வதின்மூலம் அரசன் வாதனையைப் போக்க முனைகிறார். அரசன் இசைவு கொண்டு அளவற்ற பொருளை ஓர் சீலையில் முடிந்து ஒரு கம்பத்தின் உச்சியில் கட்டி வைக்கச் செய்கிறார். 'பரதத்துவ நிர்ணயம் செய்து வெற்றி பெறுவோர் இப்பொற்கிழியைப் பரிசாகக் கொள்ளலாம்' என நாடு முழுவதும் அறிவிக்கச் செய்கிறார்.

வடபெருங்கோயிலுடையான் ஆழ்வார் கனவில் தோன்றி, 'நீர் சென்று பொற்கிழியை அறுத்து வாரும்' என நியமனம் செய்கிறான். 'கையுங்களைக் கொட்டுமாய் ஊழியம் புரிந்து வரும் நான் என்னுடைய கையிலுள்ள தழும்பைக் காண்பித்து அறுத்து வருவேனோ! கற்றறியாத நான் பண்டிதர்களோடு எவ்வாறு வாதிட்டு வெற்றி பெறுவேன்.' எனத் தயங்குகிறார். இவர் தயக்கம் கண்ட பெருமாள், 'உமக்கெதற்கு இவ்வீண் கவலை? அனுப்பி வைக்கும் நானல்லவோ கவலைப்பட வேண்டும். மயங்காது உடன் சென்றிடுவீர் கூடல் மாநகரம் நோக்கி' எனச் சொல்லி மறைந்தான். முன்னமேயே அவனால் நியமிக்கப் பட்ட கோவில் கைங்கர்யபரர்கள் திருப்பல்லக்கு திருச்சின்னம் திருவாலவட்டம் முதலியவைகளுடன் தயாராயிருந்தனர். ஆழ்வாரும் இசைந்து திருப்பல்லக்கில் அவர்கள் புடைசூழ் கூடல் மாநகரை நோக்கிப் புறப்பட்டார்.

கூடல் மாநகரம் விழாக்கோலம் பூண்டது போல் விளங்கிற்று. வேத விற்பன்னர்களும் பண்டிதர்களும் வந்து குழுமினர். அரசனும் அமைச்சனும் அவர்களை வரவேற்று தக்க ஆசனங்களில் அமரச் செய்தனன். அங்கு வந்து சேர்ந்த ஆழ்வாரைப் பற்றி முன்னமே செல்வ நம்பி மூலம் அறிந்திருந்தவனுகையாலே அமைச்சருடன் சென்று எதிர் கொண்டழைத்து வந்தான். ஆழ்வாரின் தேஜஸ்ஸாலே கவரப்பட்ட அரசன் அவர் திருவடிகளிலே விழுந்து பணிந்து உயர்ந்த ஆசனத்திலே வீற்றிருக்கச் செய்தான். கல்விச் செருக்காலே இது கண்டு பொறுக்காத பண்டிதர்கள் ஆக்ஷேபக் குரலெழுப்பினர். அமைச்சர் செல்வ நம்பியும் நிதானமுடன் 'வேதாந்த விழுப் பொருளான பர தத்துவத்தை நிர்ணயம் செய்ய வேணும்' என ஆழ்வாரைப் பணிவோடு கேட்டுக் கொண்டார்.

கனவிலே தோன்றி மறைந்த கண்ணன் இவர் கருத்தில் தோன்றி நின்று, "தாழாதே சார்ங்கமுதைத்த சரமழைபோல்" (திருப்பா. 4) எனத் தான் அன்று ஏந்தியிருந்த சார்ங்க வில்லின் நாணினின்றும் தாமாகவே தெறித்தோடிப் பாய்ந்த சரமழை போல் வேத வாக்கியங்களையும் பல பிரமாணங்களையும் தானே இவருக்கு எடுத்துக் காட்டினுன். ஆகவே ஆழ்வாரும் கடல் மடை திறந்த வெள்ளம் போல் 'ஸ்ரீமந் நாராயணனே பரம்பொருள்' என்னும் வேத வாக்கியங்களையும் ஸ்மிருதி இதிகாச புராணங்கள் ஆகியவற்றினின்றும் பற்பல பிரமாணங்களையும் எடுத்துக் கூறினுர். எதிரிட்டு நின்ற பண்டிதர்களெல்லோரும் வாய் திறக்க முடியாது 'ஸ்ரீமந் நாராயணனே பரம் பொருள்' என ஒப்புக்கொள்ளும்படி செய்தார். மேலும் தங்களுக்கு அவரே தலைவர் எனப் பறை சாற்றும் வண்ணம் 'பட்டர்பிரான்' என்னும் திருநாமத்தையும் சாத்தி மகிழ்ந்தனர். ஆழ்வாரது வெற்றியானது ஸ்ரீமந் நாராயணனுக்கும் உகந்ததே என்னும்படியாக கம்பத்தின் மீது கட்டப் பெற்ற பொற்கிழியும் இவர் முன்னே தாழ வளைந்து நின்றது. "விரைந்து கிழியறுத்தான்" (தனியன்) என்றவாறு உடன் அக்கிழியை அறுத்துக் கொண்டார்.

மகிழ்ச்சிக் கடலிலே திளைத்த மன்னன் ஆழ்வாரை தன் பட்டத்து யானை மீதேற்றி தானே முன்னின்று நகர்வலம் செய்வித்தான். 'வேதப் பயன் கொள்ளவல்ல விட்டுச் சித்தன் வந்தார்', 'மெய்ந்நாவன் வந்தார்', 'மெய்யடியார் வந்தார்' என்னும் கோஷம் முழங்க குடை சாமரம் கொடி ஆலவட்டம் இவைகளைக் கையிலேந்திக் கொண்டு பண்டிதர்களும் உடன் சென்றனர். தனயனின் விழாக்கோலம் காண 'ஸ்ரீமந் நாராயணன் ஸ்ரீ பூமிதேவிகள் உடனிருக்க சங்கு சக்கரங்களை கையிலேந்தி கருடவாகனனுய் யாவரும் காணும் வண்ணம் ஆகாயத்தில் தோன்றினுன்.

காலம் நடையாடாத பரமபதத்து நாதன் காலம் நடையாடும் இப்பூமியில் தோன்றினுன். இவ்வழகு சேர்த்திக்கு யாரால் என்ன தீங்கு வருமோவென அச்சம் கொள்ளுகிறுர் ஆழ்வார். 'உலகையெல்லாம் காப்பாற்றுபவன் அவனே; அவனுல் காப்பாற்றப்படும் பொருளேநாம்' என்னும், மதியை அவருக்குள்ள மிக்க பிரேமம் என்னும் திரை மறைக்கின்றது. 'சோராத காதல் பெருஞ்சுழிப்பால்' (இராமா. நூற். 15) என அவனையே ரக்ஷகனுகக் கொண்டு அவனுல் வாழ்ச்சி பெற நினைக்கும் மற்ற ஆழ்வார்களைக் காட்டிலும் ஊற்றம் பெருக்கொடுத்தோட "பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு" (திருப்பல்லாண்டு) எனப் பல்லாண்டு பாடிக் காப்பிடுகிறுர். "பொங்கும் பரிவாலே வில்லிபுத்தூர் பட்டர்பிரான் பெற்றுன் பெரியாழ்வார் என்னும் பெயர்" என்று உபதேச ரத்னமாலையில் மாமுனிகள் அனுபவிக்கும் வண்ணம் எம்பெருமான் 'பெரியாழ்வார்' எனத் திருநாமம் சூட்டி மறைந்தார். "வேதத்துக்கோ மென்னுமது போல் உள்ளதுக்கெல்லாம் சுருக்காய் மங்கலமாதலால்" (உபதேச. ரத். 19) என வேதத்துக்கு 'ஓம்' என்னும் 'பிரணவ'ச் சொல் போன்று எல்லா அர்த்தங்களையும் தன்னுள் கொண்டு சுருக்கமாயும் மங்கலமாயுமிருப்பதால் திவ்ய ப்ரபந்தங்களுக்கெல்லாம் முதன்மையாய் பரிணமிக்கும் பெருமை பெறுகிறது 'திருப்பல்லாண்டு'.

பொற்கிழியின் பெரும் பொருளைக் கொண்டு வடபெருங்கோயிலுடையானுக்கு அரிய பெரிய பல திருப்பணிகளைச் செய்தார். மேலும் நந்தவன கைங்கர்யத்தோடு அவனுக்குத் திருமாலை கட்டிச் சூட்டி வந்தார். கிருஷ்ணுவதாரத்தில் மிகவும் ஈடுபட்டு பால்ய லீலைகள் ஒன்றுவிடாது அனுபவித்தும் அவனது ஆனைத் தொழில்களில் திளைத்தும் பாமாலைகள் அருளினுர். அவைகளே 'பெரியாழ்வார் திருமொழி'எனப்படுகிறது. 'பிள்ளைத் தமிழ்' என்னும் தமிழிலக்கியம் மலர வித்திட்டவர் பெரியாழ்வார் எனப் பெரியோர் சொல்வர். அருமைக் குமாரத்தியான ஆண்டாளை ரங்கநாதனுக்கு அர்ப்பணித்து அவனுக்கும் மாமனுராகும் பேறுபெற்றுர். கடைசிக் காலத்தில் திருமாலிருஞ்சோலை அழகனுக்குத் தொண்டுபுரிந்து பின்னர் பேரின்பப் பெருவீட்டை யடைந்தார்.



# திருமொழி பாடிய பெரியாழ்வார்

"பல்லாண்டு பல்லாண்டு பல்லா
யிரத்தாண்டு
பலகோடி நூறாயிரம்
மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா!
உன்
செவ்வடி செவ்வி திருக்காப்பு"

"அடியோ மோடும் நின்னோடும்
பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு
வடிவாய் நின்வல மார்பினில் வாழ்
கின்ற மங்கையும் பல்லாண்டு
வடிவார் சோதி வலத்துறையும்
சுடராழியும் பல்லாண்டு
படைபோர் புக்கு முழங்கும் அப்பாஞ்ச
சன்னியமும் பல்லாண்டே"

என்ற திருப்பல்லாண்டு பாடல்களை அறியாத வைணவர் யாரும் இருக்க முடியாது. அவ்வாறே அப்பாடல்கள் ஒலிக்காத திருமாலின் திருக்கோயிலும் இருக்க முடியாது. அவற்றைப் பாடியருளிய விஷ்ணுசித்தரோ, தம் பெயருக்கேற்ப சித்தத்தை ஸ்ரீமந் நாராயணனின் திருவடித் தாமரைகளில் எந்நேரமும் வைத்திருந்த பெரியார். திருப்பல்லாண்டு பாடியதாலேயே திருமாலால், 'பெரியாழ்வார்' என்ற பெயரிட்டழைக்கப் பெற்ற பெற்றியார்.

கலியுக ஆரம்பத்தில் நாற்பத்தேழாவதான குரோதந வருடத்தில் ஆனி மாதம் ஒன்பதாம் தேதியன்று கருடனின் அம்சமாக ஸ்ரீவில்லிபுத்தூரில் பெரியாழ்வார் அவதரித்தார். அவருடைய பெற்றோர் முகுந்தபட்டரும், பத்மா என்பவரும் ஆவர். அவருக்கு விஷ்ணுசித்தர் என்ற திருப்பெயரிட்டுப் பெற்றோர் அவரை அருமையாக வளர்த்து வந்தனர். ஸ்ரீ வில்லிபுத்தூர் வட பெருங்கோயிலுடையானுக்குத் திருத்தொண்டாற்றும் பேற்றினைத் தம் தந்தையாரைத் தொடர்ந்து தாமும் பெற்றார் பெரியாழ்வார். அவருக்கு உரிய காலத்தில் திருமணமும் நிகழ்ந்தது. அவருடைய துணைவியார் இறைப்பணிக்கு பெரிதும் உதவியாக இருந்து வந்தார். அதனால் ஊக்கமும், ஆக்கமும் கொண்ட பெரியாழ்வார் அழகியதோர் மலர்வனம் அமைத்து, தம் திருக்கரங்களால் கொய்த நாள்மலர்களைத் திருத்தமாக மாலையாகக் கட்டி, திருமாலுக்குச் சாற்றிக் கண்ணாரக் கண்டு களிப்பெய்துவதே நாளும் பெரிய பணியாகத் தலைமேற்கொண்டார்.

அவரின் வைணவத் தொண்டினை வையகம் உணர்ந்து போற்றும் காலமும் வந்து வாய்த்தது. பாண்டிய மன்னன் ஸ்ரீ வல்லபதேவன் என்பான் அவர் காலத்தவன். அவனுக்கு, 'மனிதராய்ப் பிறந்தார் உய்யலாகும் வழி' பற்றிய சிந்தனை எழுந்தது. அச்சிந்தனையின் விளைவாக மறுமை நலனுக்கு இம்மையில் செய்யலாவது யாதென்ற வினாவும் தோன்றியது. அவ்வினாவிற்குச் சரியான விடையளிப்பாருக்குத் தமதரசவையில் ஒரு தோரணத்தில் கட்டிய பொற்கிழி பரிசாக வழங்கப்படுமென பறையறிவித்தான். அதனைக் கேட்ட பலரும் அரசனிடம் வந்து தமக்குச் சரியெனப்பட்டக் கருத்துக்களைச் சொல்லிப் பார்த்தனர். ஆனால் எவரும் மன்னன் மகிழும் வண்ணம் விடையளிக்காத காரணத்தால் பொற்கிழிப் பெற்றாரிலர். அந்நிலையில் வடபெருங்கோயிலுடையான் பெரியாழ்வாரின் கனவில் தோன்றி பாண்டியனின் ஐயத்தைப் போக்க அரண்மனைக்குச் செல்லுமாறு பணித்தார். அவரும் பரந்தாமனின் ஆணைப்படியே மதுரையம்பதி சென்று மன்னவனின் மனங்கொள்ளுமாறு "ஸ்ரீமந் நாராயணனே பரம்பொருள்" என்று உறுதியுடன் கூறியருளினார். உடனே பொற்கிழியானது தானே அவர் முன்னர் தாழ வளைந்து வந்தது. அதனைப் பெற்றுக் கொண்ட பெரியாழ்வார் பின்னர் மன்னவனால் நகர்வலம் செய்யப் பெற்று சிறப்புற்றார். அப்போது கற்றுணர்ந்த அறிஞரனைவரும், 'அவரே தங்களுக்குத் தலைவராகும் தகுதியுடையவர்' என்பது விளங்குமாறு அவருக்குப் "பட்டர் பிரான்" என்ற சிறப்புப் பெயர் சூட்டி மகிழ்ந்தனர். அந்நிலையில் ஸ்ரீமந் நாராயணனே கருட வாகனத்தில் ஆகாயத்தே தோன்றி காட்சி தந்தருளினான். அவனது பேரழகில் மயங்கிய பெரியாழ்வார், அவனுக்குக் காண்பார் கண்ணெச்சில்பட்டு ஏதேனும் தீங்கு நேராதிருக்க வேண்டி 'பல்லாண்டு வாழ்க'வென்று பாடலானார். அப்போது அவர் பாடிய பல்லாண்டு திருப்பாடலானது பக்தியுலகிலேயே காணக் கிடைக்காத அரிய பொக்கிஷமாகும். சாதாரணமாக ஒரு தாயானவள் தன் குழந்தைகள் நலமாயிருக்க வேண்டியும், பல்லாண்டு வாழ வேண்டியும் வாழ்த்துவதென்பது இயற்கை. அகில உலகத்தையும் படைத்தருளும் பகவானைத் தாய்க்கே தாயாகி பல்லாண்டு பாடிய பெருமை பெரியாழ்வாருக்கு உண்டு. எம்பெருமானும் அவருடைய அன்புள்ளத்தைப் பெரிதும் பாராட்டி "பெரியாழ்வார்" என்ற திருநாமம் அளித்து மறைந்தருளினான். வேறெந்த ஆழ்வாரும் இறைவனைக் குறித்து இவ்விதம் பல்லாண்டு பாடியதில்லை. எனவே, பரம்பொருளுக்கே அன்பின் மிகுதியால் பல்லாண்டு பாடியவர்

திரு. வே. சோமசுந்தரம்,
நங்கநல்லூர்.

எந்தவிதத்திலும் பெரியாழ்வார் தானே!

அதன்பின், பெரியாழ்வார் ஸ்ரீ வில்லிபுத்தூருக்குத் திரும்பி வந்து முன்னர் போலவே வட பெருங்கோயிலுடையானுக்கு மாலை புனைந்து சூடும் திருப்பணியில் ஈடுபடலானார். அத்தோடு பரந்தாமனின் புகழ்பாடும் பாமாலையும் இயற்றிப் பாடி வரலானார். அவ்வாறான பாமாலைகளே நமக்குக் கிடைத்துள்ள பெரியாழ்வாரின் திவ்யப் பிரபந்த பாடல்களாகும். அவற்றின் சுவை தேறுமுன் அனுவரதமும் ஆண்டவனின் அருட் புகழே பாடி வந்த பெரியாழ்வார் அடைந்த பெரும்பேற்றினைப் பற்றிக் குறிப்பிடாமல் இருக்க முடியாது. அவர் அருமையாக அரவணையானுக்காக வேண்டி அமைத்திருந்த மலர் வனமே அப்பேற்றினை அவருக்கு அளித்தது. அப்பேறு உயிருள்ள பேறு, ஒப்பற்ற பேறு; உலகுய்ய வந்த திருப்பேறு. ஆம், திருமகளே ஒரு பெண்மகவாய் அவருடைய நந்தவனத்தில் வந்து தோன்றினார். பெரியாழ்வார் அம்மகளாரைக் கண்டெடுத்து அருமைப் பெருமையாக வளர்க்கையிலே அடைந்த மகிழ்ச்சிக்கோர் அளவில்லை. கோதை என்ற திருநாமத்தோடு வளர்ந்த பெண்பிள்ளை கோபாலனையே மணாளனாகக் கொண்டு அவனை ஆட்கொண்ட திறத்தால் 'ஆண்டாள்' என்று அனைவராலும் அழைக்கப் பெற்றபோது அவர் அடைந்திருக்கக் கூடிய ஆனந்தத்தைச் சொல்லால் விவரிக்கக் கூடுமோ? பரந்தாமனுக்கே மாமனாராகும் பெருமை எல்லோருக்குமா வாய்க்கக் கூடும்?

நிறை வாழ்வு வாழ்ந்த பெரியாழ்வார் நமக்கெல்லாம் ஓர் ஒப்புயர்வற்ற வழிகாட்டியாவர். ஆண்டவனைத் தொழுதல், ஆண்டவன் அருட் புகழே பாடல், ஆண்டவன் அடியாரைப் பேணல், ஆண்டவன் பணியே நற்பணியெனக் கொள்ளல் இவையே நாமுய்யும் வழியென அவர் வாழ்வினின்றும் நாம் அறிந்துகொண்டு, அவ்வழியே ஒழுகி உய்யலாம்.

இனி, அவர்தம் திருப்பாடல்களின் திறத்தை ஒரு சிறிது காண்போம்.

பெரியாழ்வாரின் திவ்யப் பிரபந்தமாக நமக்கு நானூற்று எழுபத்து மூன்று பாடல்கள் கிடைத்துள்ளன. அவை 'பெரியாழ்வார் திருமொழி' எனப் போற்றப்படுகின்றன. அவை யனைத்தும் அமுதில் தோய்த்தெடுத்த இனிப்புக்கள்; தின்னத் தின்னத் திகட்டாத தேன்கட்டிகள். அமுதும் தேனும் உடலை வாழ்விக்கும் தன்மையவை. அவர்தம் திருப்பாடல்களோ உயிரை உய்விக்கும் பெற்றியவை.

பெரியாழ்வார் திருமாலின் திருவவதாரங்களில் கண்ணன், இராமன் ஆகியோரிடம் பெரிதும் ஈடுபாடு கொண்டவர். அதிலும், கண்ணனிடத்து சொல்லொணா அன்பு மீதூரப் பெற்றவர். அவர் கண்ணனின் திருவவதாரச் சிறப்பைப் பலபடப் பாடியுள்ளார். கண்ணன் வரவால் "பாடுவார்களும் பலபறை கொட்ட நின்று ஆடுவார்களும் ஆயிற்று ஆய்ப்பாடியே" என்கின்றார் பெரியாழ்வார். அவன் திருவாய் மலர்ந்தருளிய போதெல்லாம் யசோதை, 'வையமேழும் கண்டாள் பிள்ளை வாயுளே' என்று கூறுகின்றார் ஆழ்வார். அவன் சாதாரணமானவனா? 'மத்த மாமலை' தாங்கிய மைந்தனல்லவா!

அவனின் திருமேனியழகில் ஈடுபட்ட பெரியாழ்வார் அக்குழவிக் கண்ணனுக்காக யசோதையாகவே தம்மைப் பாவித்துக் கொண்டு தாலாட்டுப் பாடுகிறார். அவருடைய தாலாட்டுப்பாடல் நாவினிக்க நெஞ்சினிக்க வந்த பாடல்; இந்த வையம் உள்ளளவும் ஒலிக்கும் தன்மையதான பாடல். அப்பாடல் இதோ:

"மாணிக்கம் கட்டி வயிரம் இடைகட்டி
ஆணிப்பொன் னால்செய்த வண்ணச் சிறுத்தொட்டில்
பேணி உனக்குப் பிரமன் விடுதந்தான்
மாணிக் குறளனே! தாலேலோ
வையமளந்தானே! தாலேலோ"

தாலப் பருவத்திற்குப் பின் கண்ணன் அம்புலிப் பருவம் அடைகிறான். அப்போது அவன் நிலவைத் தன் சிறுக்கைகளால் காட்டிக்காட்டி யழைக்கின்றான்! அவன் செங்கீரைப் பருவமடைந்து அழகிய தன் அங்க அசைவுகளைக் காட்டுகின்றபோது கொள்ளை இன்பமல்லவா கூடியிருப்பார்க்குக் கிட்டியிருக்கும்? அதனால் தான்,

"அன்னமும் மீனுருவும் ஆளரியும் குறளும்
ஆமையு மானவனே! ஆயர்கள் நாயகனே!
என்அவ லம்களைவாய்! ஆடுக செங்கீரை
ஏழுல கும்முடையாய்! ஆடுக ஆடுக"

என்று யசோதை வேண்டியதாகப் பாடுகிறார் பெரியாழ்வார்.

சப்பாணி பருவத்துக் கண்ணனோ, 'புட்டியில் சேறும் புழுதியும் கொண்டு வந்து அட்டி யமுக்கி அகம் புக்கறியாமே சட்டித் தயிரும் தடாவினில் வெண்ணெயும் உண் பட்டிக்கன்றாய்' இருந்தான். இப்பருவத்து கைகொட்டி விளையாடுபவனே தம் கரங்களால் பாரதப் போரில் பாண்டவர்க்காக தேரோட்டப் போகிறவன்; சிங்க வுருவாய் உளந்தொட்டிரணியன் ஒண்மார் வகலம் பிளந்திடப் போகிறவன்.

பன்மாயக் கள்வனான கண்ணன் தளர்நடைப் பருவமும், அச்சோப் பருவமும் அடைந்ததையெல்லாம் அழகுபடப் பாடியுள்ளார் பெரியாழ்வார். அக்கண்ணன் தம் பின்னால் வந்து தம் முதுகைக் கட்டி யணைத்துக் கொண்டால் எத்தகு பேரின்பம் வாய்க்கும்? அதனையும் பாடி வைத்துள்ளார் பெரியாழ்வார். அடுத்ததாக, கண்ணன் அப்பூச்சி காட்டி விளையாடியதையும், அவனைப்

பாலுண்ண வருமாறு யசோதை அழைத்ததையும், அவனுக்குக் காது குத்துதல் வைபவம் நிகழ்ந்ததையும், அவனே நீராட வருமாறு யசோதை கூப்பிட்டதையும் கூறியுள்ளார்.

கண்ணனின் குழலே வாரக் காக்கையை வாவென யசோதை அழைக்கின்ற அமுதினும் இனிய பாடல்களில் முதலாவதைக் கீழே காணலாம்:

"பின்னே மணாளனைப் பேரில் கிடந்தானை
முன்னை யமரர் முதல்தனி வித்தினை
என்னையும் எங்கள் குடிமுழுது
ஆட்கொண்ட
மன்னை வந்து குழல்வாராய் அக்
காக்காய்!
மாதவன் தன்குழல் வாராய்அக்
காக்காய்!"

இதற்குப்பின் காக்கையைக்காகுத்தனுக்காக கோல் கொண்டு வரச் சொல்கிறாள் யசோதை. அவனுக்குப் பூச்சூடி கண்டு மகிழ வருமாறும் அவனை அழைக்கிறாள். அத்தோடு விட்டாளா? அந்தியம் போதான போது யார் கண்ணும் படாதிருக்கக் காப்பிட வருமாறு அவனை வேண்டுகிறாள்.

இவ்வாறு செல்லமாக வளர்ந்த கண்ணன் சும்மா இருப்பானா? அவன் வெண்ணெய் விழுங்கி வெறுங் கலத்தை வெற்பிடை யிட்டதனோசை கேட்டு ஆயர் அஞ்சினர். அத்தோடு விட்டானா அவன்?

"ஆற்றி லிருந்து விளையாடு வோங்களை
சேற்றா லெறிந்து வளைதுகில் கைக்
கொண்டு
காற்றிற் கடியனாய் ஓடி அகம்புக்கு
மாற்றமும் தாரானால்......"

என்று ஆயமகளிர் யசோதையிடம் வந்து முறையிடும் வண்ணம் குறும்புகள் பல செய்து வந்தான்.

அவனின் அசாதாரண செயல்களைக் கண்டு மருண்ட யசோதை அவனுக்குப் பாலூட்டவே அஞ்சினாள். ஆனால் அவனைக் கன்று மேய்த்து வர கானம் அனுப்பிய பின்னரோ அவனையே நினைந்திருந்து வருந்தவும் செய்தாள். மாலையில் வீடு திரும்பும் கண்ணனைக் கண்டவிடத்து,

"ஞாலத்துப் புத்திரனைப் பெற்றார் நங்கைமீர்! நானே மற்றாரு மில்லை" என்று பெருமிதம் பொங்க பேசி மகிழ்ந்தாலொழிய அவள் துயரம் தீர்வதில்லை.

குன்றெடுத்து ஆநிரைக் காத்த பிரானாகிய அவன் கோகுலத்துக் கோதையரின் நெஞ்சங்களையெல்லாம் கொள்ளை கொண்டு விட்டான். கண்டார் காமுறும் கார்முகில் வண்ண கண்ணல்லவா அவன்!

அடுத்து வரும் பாடல்கள், அவன் ஆயரையும், ஆநிரையையும் கல் மழையினின்றும் காக்க வேண்டி குடையாக எடுத்த கோவர்த்தன கிரியின் சிறப்பைக் கூறுகின்றன. அவற்றுக்குப்பின், அவன் புல்லாங்குழல் ஊதின சிறப்பு விதந்தோதப்படுகிறது. கண்ணன் குழலூதும் தெய்வம். குழலே இனியது. அதனை தெய்வமே இசைக்கின்றபோது 'தெய்வ கானம்' பிறப்பது இயல்பு தானே! அவனது குழலிசையால் அகிலத்து உயிருள்ளவையும், உயிரல்லவையும், வானத்து தேவரும் மெய்மறந்து எழுது சித்திரங்கள் போல நின்றன ரெனில் நாம் ஆச்சரியப்படத் தேவையில்லைதான்! ஆனால் இதனைப் பலப் பட எடுத்துக்கூறும் பெரியாழ்வாரின் பாடல்களைப் படித்து இன்புறலாம்.

கண்ணனிடத்து மயங்கிய மனத்தினளாகிய தலைமகளொருத்தியின் தாய் அவளிடத்துக் காணலாகும் மாற்றங்களைக் கண்டு வருந்துவதாக வரும் பாடல்கள் அகத்துறை இன்பமும், ஆன்மீக ஞானமும் ஒரு சேரப் பெற்றவை. அத்தாயின் வருத்தம், தலைமகள் தலைமகனோடு சென்றுவிட்ட நிலையில் மிகுதியாவதில் வியப்பேது? ஆனால் அப்பாடல்களின் பின்னணியில் பெரியாழ்வார் தம் மகளாரான ஆண்டாளை அரங்கனுக்கு மணமுடித்துத் தந்ததால் அடைந்த பிரிவுத்துயர் அமைந்திருந்து வெளிப்படக் காணலாம்.

"ஒருமகள் தன்னை யுடையேன் உலகம்
நிறைந்த புகழால்
திருமகள் போல வளர்த்தேன் செங்
கண்மால் தான் கொண்டு போனான்"

என்ற பாடலடிகள் இக்கருத்தை வலியுறுத்துவதாய் உள்ளன.

இராம, கிருஷ்ணாவதாரங்களின் சிறப்புக்களை முறையே இரு தோழியர் கூறி உந்தி பறக்க விடுவதாக வரும் பதினொரு பாடல்களும் படித்தின்புறத்தக்கவை.

அடுத்து, இலங்கைக்குத் தூதாகச் சென்ற அனுமன் அசோக வனத்தே சீதா பிராட்டியாரைக் கண்டு, அவரிடம் இராமன் கொடுத்த கணையாழியைத் தந்து, இராமபிரான் கூறிய சில அடையாளங்களைக்கூறிய நிகழ்ச்சி பத்துப் பாடல்களில் இடம் பெற்றுள்ளது.

அடுத்த பத்தில் ஆண்டவனைக் காணத் துடிப்பார் காணலாகும் வழி வகை கூறப்பட்டுள்ளது. அவனை இராமனாகவும் காணலாம்; கிருஷ்ணனாகவும் காணலாம். எல்லா அவதாரங்களிலும் தோற்றமளிக்கும் பரம்பொருள் ஒன்றே.

பெரியாழ்வார், திருக்கோட்டியூர், திருமாலிருஞ்சோலைமலை, திருவரங்கம் ஆகிய திருப்பதிகளில் எழுந்தருளியுள்ள எம்பெருமான்களிடத்து எல்லையற்ற அன்பு மீதூரப் பெற்றவர். அத்திருப்பதிகளையும், அவ்விடங்களில் எழுந்தருளியுள்ள எம்பெருமான்களின் பெருமைகளையும் பரக்கப் புகழ்ந்து அவர் பாடியுள்ள பாடல்கள் நம்மைப் பக்தி பரசவத்தில் ஆழ்த்த வல்லவை.

பெரியாழ்வாரைப்போன்ற பெரும் பக்தரைக் காண்பதரிது. அவரைப் போன்ற ஞானியரையும் பார்த்த

(36-ம் பக்கம் பார்க்க)

# எண்ணற்கு அரிய ஓர் ஏனம்



கருங்கடல் வண்ணனும் காத்தற் கடவுளாகிய திருமாலின் பத்து அவதாரங்கள் பலவாறு போற்றப்படுகின்றன. இவை பத்தும் பரிணும வளர்ச்சியின் முக்கிய படிகளை உணர்த்துவதாக ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். இவற்றில் மூன்ருவதாக எண்ணப்படுவது வராகம். அதாவது பன்றியின் வடிவம்.

வைகுண்டத்து வாயிற்காப்போரான ஜய விஜயர்கள், சனகர் சனந்தனர் என்ற முனிவர்களின் சாபம் பெற்றனர். அது நீங்கி மீண்டும் பழைய நிலையை அடைய இவர்கள் இறை அன்பர்களாக நூறு பிறவிகள் எடுக்க வேண்டும் அல்லது தீய குணம் படைத்தவர்களாக மூன்று முறை பிறக்கவேண்டும். இவற்றில் இவர்கள் தீயவர்களாக மூன்று பிறவி வேண்டுமென இறைவனிடம் வேண்டிக் கொண்டனர். முதலில் இவர்கள் காசிப முனிவரின் மனைவியான திதியிடத்து இரணியகசிபு, இரணியன் என்ற இரட்டைப் பிள்ளைகளாகத் தோன்றினர். இவர்கள் எல்லா உலகங்களையும் வென்று சோணபுரம் என்ற நகரில் வளங்கள் பலவற்றுடன் வாழ்ந்து வந்தனர். நாரதர் மூலம் எதிர்காலத்தில் தங்கள் வழித் தோன்றலான மாவலி என்பவனைத் திருமால் வஞ்சித்துப் பூமியைக் கவர்ந்துவிடுவான் என்பதை அறிந்து கொள்ளுகின்றனர். அதனுல் கோபமுற்ற இரணகசிபு பூமியைப் பாயைப் போல சுருட்டிப் பாதாள உலகத்தில் வைத்துவிட்டான். பூமியில் வேள்விகள் இயற்றப்படாத காரணத்தால், அமரர்கள் மிகவும் நலிந்தனர். அதனுல் அவர்களின் முறையீட்டின் பேரில் வைகுந்தநாதன் வராக வடிவம் கொண்டு பாதாளம் சென்று பூமியைத் தன் கோரைப் பற்களால் தூக்கிக் கொண்டிருந்தான். அதை அறிந்த அவுணன் தன் படையுடன் போருக்கு வர, வராகம் அவனைக் குத்திக் கொன்றது. அதன்பின் அரவணைப்பள்ளியான் பூமியைக் கொண்டு வந்து முன்போல் நிறுவி விட்டான்.

சிவபெருமான் அந்தகாசுரனுடன் நடத்திய போரில் சிவபெருமானுக்கு உறுதுணையாம் பொருட்டு குறிப்பிட்ட தெய்வங்கள் தங்கள் சக்திகளை அனுப்பினர். அவ்வாறு அனுப்பப்பட்ட ஏழு சக்திகளும் சப்த கன்னியர் எனப்பட்டனர். அவர்களாவன: மகேசுவரி, வைணவி, வராகி, பிரம்மி, கௌமாரி, இந்திராணி மற்றும் சாமுண்டியாம். திருமாலின் சக்தியானவைணவி ஏற்கெனவே கூறப்பட்டிருப்பினும், வராகமூர்த்தியின் சக்தியான வராகியும் ஏழு கன்னியரில் ஒருவளாக எண்ணப்படுகிருள். ஒரு சில இடங்களில் நரசிம்மி என்ற வடிவம் காணப்படினும், வராகி வடிவம் தான் ஏழு கன்னியரில் பொதுவாக அமைக்கப்பட்டது. இது அக்கால மக்கள் வராக வடிவத்தின்பாற் கொண்ட ஆழ்ந்த அன்பினைப் புலப்படுத்துகிறது.

திரு. சி. இராசமாணிக்கம் பி.ஏ.,பி.காம்.,
பொள்ளாச்சி.

திருமால் அன்பர்களாகிய ஆழ்வார்கள் தமது திருப்பாசுரங்களில் இந்த வடிவைப் போற்றிப் பணிந்

துள்ளனர். ஆண்டாள், குலசேகரப் பெருமாள் மற்றும் பூதத்தாழ்வார் ஒரு இடத்திலும், பேயாழ்வார் இரண்டு இடங்களிலும், பொய்கை யாழ்வார் 4 இடங்களிலும், பெரியாழ் வார் மற்றும் திருமழிசைப்பிரான் 5 இடங்களிலும், நம்மாழ்வார் 21 இடங்களிலும், மங்கை மன்னன் 26 இடங்களிலும் இந்த வடிவைப் பர விப் புகழ்ந்துள்ளனர். மங்கை மன் னன்தான் இந்த அவதாரத்தை அதிக அளவில் தமது திருப்பாசுரங்களில் போற்றியுள்ளார் என்பது தெளி வாகிறது.

வராகம் தன் கோரைப்பற்களால் பூமியை இடந்து சென்றதை "பா ரிடத்தை எயுறுகீற இடந்தானே" என்பர் மங்கை மன்னன். அதன் பின் வராகம் நிலமகளைத் தன் எயிற் றில் தாங்கியதை "ஊனம் இல் ஞாலம் ஒடுங்கும் எயிற்று ஆண் ஏனம்" என்பர் கம்பநாட்டாழ்வார். இதினின்றும் அதன் எயிற்றின் வலி மையை உணரலாம். பெரியாழ் வார் "வல்லெயிற்றுக் கேழலுமாய்" என இதன் திண்மையைச் சிறப்பிக் கிறார். இதுவானளாவ பேருருவம் உடைத்து என்பதை "நெடு விசும்பு அணவும் பன்றியாய்" என மங்கை மன்னனைக் குறிப்பிட்டுள்ளார். அத் துடன் அவர் அமையாது மேலும் "சிலம்பினிடைச் சிறுபரல் போல் பெரிய மேரு திருக் குளம்பில் கண கணப்ப" என்று இந்த வடிவின் பேருருவத்தை விரிவுபட உரைக் கிறார். அதாவது காலில் அணியும் அணிகலனை சிலம்பில் உள்ள ஒரு சிறு பரலைப் போன்று வராகத்தின் குளம்பில் மலைகளில் பெரிய மேரு மலை காணப்படுகிறதாம்.

சங்க நூலான பரிபாடலில் ஏழு பாடல்கள் கார்முகில் வண்ணனைப் பற்றியது. அவற்றில் இரண்டாம் பாடலில் கீரந்தையார்,

"கேழல் திகழ்வரக் கோலமொடு
பெயரிய ஊழி" (வரி 16-17)



கடற்கரையில் புனித குளியல் - இராமேஸ்வரம்.
திருமதி. எம். ராஜ்யலட்சுமி.

என்று குறிப்பிட்டுள்ளார். அதா வது நீரினின்றும் நிலத்தைப் பன்றி யாகத் திருமால் மேலே கொண்டு வந்து முன்போல் உயிர்களை வாழச் செய்தமையால், குறிப்பிட்ட ஊழி காலம் "வராக கற்பம்" எனப்பட் டது என்பதாம். அவர் மேலும் அதே பாடலில்,

"செய்யோன் சேர்ந்த நின் மாசில் அகலம்
வளர்திரை மண்ணிய கிளர் பொறி நாப்பண்
வைவாள் மருப்பின் களிறுமணன் அயர்பு
புள்ளி நிலனும் புரைபடல் அரிது
(வரி 31-34)

என்று கூறியுள்ளார். அதா வது திருமகளை மார்பிடத்து கொண்ட திருமால் வராக வடிவம் கொண்டு தன் கூரிய வெள்ளிய கொம்புகளால் நீரினின்றும் நிலமகளை எடுத்து வரு வதால், அவன் துன்பம் அடைய வில்லை என்பதாம். மூன்றும் பாட லில் கடுவன் இளவெயினனார்,

"ஆழிக்கண் இரு நிலம் உருகெழு
கேழலாய் மருப்பின் உழுதோய்"
(வரி 23-24)

என்பர். அதாவது அச்சத்தை அளிக் கும் பன்றி வடிவில் கடலினின்றும் நிலத்தை தன் கொம்பால் குத்தி மேலே எடுத்து வந்தான் என்பதாம். மேலும் அவர் நான்காம் பாடலில்,

"புருவத்துக் கருவத்து கந்தத்தால்
தாங்கி இவ்வுலகம் தந்து
அடிப்படுத்து" (வரி 22-28)

என்றும் குறிப்பிட்டுள்ளார். அதா வது பண்டைநாளில் பன்றி வடிவில் தன் வலிமை பொருந்திய கழுத்தில் நிலத்தைத்தாங்கி நீரினின்றும் மேலே கொண்டு வந்தது மேரு போன்ற உயர்ந்த செயலாகும் என் பதாம். பதிமூன்றும் பாடலில் நல் லெழுந்தியார் இதன் வடிவை,

"பொலம்புனை இதழ் அணி மணி மடல் பேரணி
இலங்கொளி மருப்பிற் களிறுமாகி"
(வரி 35-36)

என்று விளக்கமாகக் கூறியுள்ளார். அதாவது பன்றியின் கொம்பின் பெருத்த அடிப்பகுதி வரை பூவேலை யுடன் கூடிய பொன்னால் செய்யப் பெற்ற கிம்புரி அணியப் பெற் றுள்ளது. மேலும் அதன் கொம்பு

ஒளி பொருந்தியதாகவும் இருந்தது என்பதாம்.

பத்ம மற்றும் வாயு புராணங்களில் வராகம் வேள்வியின் பல உறுப்புகளாகக் கூறப்பட்டுள்ளது. அதன் நான்கு கால்கள் நான்கு வேதங்கள் எனவும், அதன் கொம்பு வேள்வித் தூண் என்றும், அதன் நாக்கு வேள்வித் தீ என்றும், அதன் காதணிகள் வேதாங்கம் என்றும், அதன் இரத்தம் சோமபானம் என்றும் அதன் ஒவ்வொரு உறுப்பும் வேள்வியின் ஒவ்வொரு பொருளாகத் தத்துவ ரீதியாகச் சொல்லப்பட்டுள்ளது.

ஆகமங்களில் வராகத்தின் வடிவம் பூவராகம் (ஆதிவராகம், மகாவராகம் என்றும் சொல்லப்படும்), யக்ஞவராகம், பிரளயவராகம் என்று மூன்று வகைகளாக விதிக்கப்பட்டுள்ளன. முகம் மட்டும் பன்றி முகமாகவும், ஏனையவை மனித உடலாகவும் கொண்ட பூவராகத்தின் 4 கைகளில் பின் இரு கைகளில் சங்கும் சக்கரமும் காணப்படும். தன் மனைவியுடன் உள்ள ஆதிசேடனின் தலை மீது வராகத்தின் வளைந்த கால் இருக்கும். வளைந்துள்ள வலது தொடையின் மேல் நிலமடந்தை இரு கால்களைத் தொங்கியபடி உட்கார்ந்த நிலையில் உருவாக்கப்பட வேண்டும். வராகத்தின் முன் இடதுகை மணமகனின் கால்களைப் பிடித்த நிலையிலும், முன் வலதுகை அவளது இடுப்பைச் சுற்றியும் அமைக்கப்பட வேண்டும்.

4 கைகளைக் கொண்ட யக்ஞவராகம் சிங்காதனத்தின் மீது சுகாசனத்தில் அமர்ந்து காணப்படும். பின் இரு கைகளில் சங்கும் சக்கரமும் இருக்கும். அருகில் திருமகள் சுகாசனத்தில் உட்கார்ந்து இருக்க வேண்டும். அவளது இடது கையில் தாமரை மலரும், வலதுகை இருக்கை மீதும் இருக்கும். மற்றொரு புறத்தில் நிலமகளும் சுகாசனத்தில் உட்கார்ந்த நிலையில் காணப்பட வேண்டும். இவளது வலது கையில் நீலோற்பல மலரும், இடதுகை இருக்கை மீதும் அமைக்கப்பட வேண்டும். வராகம் மற்றும் திருமகளுக்கு வலது கால் தொங்கியும், இடது கால் மடித்து இருக்கை மீது இருக்க, நிலமடந்தைக்கு இடது கால் தொங்கியும், வலதுகால் மடித்து இருக்கை மீது இருக்க வேண்டும்.

4 கைகளைக் கொண்ட பிரளய வராகமும் யக்ஞவராகம் போன்று சுகாசனத்தில் சிங்காதனத்தின் மீது உட்கார்ந்த நிலையில் அமைக்கப்பட வேண்டும். 4 கைகளில் பின் இரு கைகளில் சங்கும் சக்கரமும் இருக்க, முன் வலதுகை அபய முத்திரையிலும், முன் இடதுகை ஊரு முத்திரையிலும் காணப்படும். வலது புறம் மண்மடந்தை வராகம் போன்று சுகாசனத்தில் உட்கார்ந்து இருக்க வேண்டும். அவளது இடது கையில் உத்பால மலரும், வலதுகை இருக்கை மீது அமைக்கப்பட வேண்டும். தன் நாயகனின் ஆற்றலைக் கண்டு அவள் அடைந்த வியப்பு அவளது கண்களில் காட்டப்பட வேண்டும்.

உத்திரபிரதேசம், மத்திய இந்தியா, ஒரிஸ்ஸா மாநிலத்தில் ஒருபகுதிஆகிய இடங்களில் வராகத்தின் வடிவம் முழுமையும் விலங்காகவே காணப்படுகிறது. முகம் மட்டும் பன்றியாகவும், ஏனையவை மனித உடலாகவும் அமைக்கும் மரபு எல்லாப்பகுதிகளிலும் பின்பற்றப்பட்டு வந்துள்ளது.

"கடிபொழில் சூழ்கடல் மல்லை" என்றும், "வங்கத்தால் மாமணிவந்துந்து முந்நீர் மல்லை" என்றும் மங்கை மன்னனால் மங்களாசாசனம் செய்யப் பெற்ற மாமல்லபுரத்தில் பல்லவப் பேரரசர்களால் தோற்றுவிக்கப்பட்ட குடைவரைக் கோயில்களில் இரண்டு வராகத்தின் பெயரால் அழைக்கப்பெற்று வருகின்றன.

வராக மண்டபத்தில் உள்ள வராக வடிவத்தில் பன்றியின் தலை மனித உடலுடன் பொருந்தியுள்ளது இயற்கையாக உள்ளதாகச் சிறப்பிக்கப்பெறுகிறது. நின்ற நிலையில் உள்ள வராகத்தின் கொம்புகள் அதன் ஆற்றலை உணர்த்துவனவாக உள்ளன. 4 கைகள் கொண்ட இந்த வடிவத்தின் இடது கால் ஊன்றியிருக்க, வலது கால் ஆதிசேடன் மீது இருப்பது இவன் பாதாள உலகத்தினின்றும் மேல் எழுந்து வருவதை உணர்த்துகிறது. இவன் பின் வலக்கையில் சக்கரமும், பின் இடக் கையில் சங்கும் இருக்க, முன் வலக்கை தாயாரை இடுப்பின் கீழ் அணைத்தபடியும், முன் இடக்கை அவளது கால்களைப் பிடித்த நிலையிலும் உருவாக்கப்பட்டுள்ளன தலையில் மகுடம் அமைக்கப்பட்டுள்ளது. வராகத்தின் வளைந்த வலது தொடையின் மீது உட்கார்ந்து உள்ளமையால் பூமாதின் முகத்தில் நாணமும், அவனிடமிருந்து மீட்கப்பெற்றமையால் மகிழ்ச்சியும் கலந்து காணப்படுகிறது. தாயாருக்கு இரு கைகள்தாம் உள்ளன. இவர்களைச் சுற்றிலும் பிரமா, திங்கள், ஞாயிறு ஆகியோர் அமைக்கப்பட்டுள்ளனர். புடை சிற்பமாக உருவாக்கப் பெற்றுள்ள இந்த வடிவம் கலைச்சிறப்பு மிக்கதாகப் புகழப் பெறுகிறது. இந்த வடிவம் ஆகம விதிகளுக்கு ஏற்ப உள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

இங்குள்ள "பரமேசுவர மகாவராக விஷ்ணு கிரகம்" எனப்பெறும் ஆதி வராகக் குடைவரைக் கோயிலிலும் வராக மண்டபத்தில் உள்ளதைப் போன்ற வடிவம் புடை சிற்பமாக உள்ளது. மேற்கு நோக்கி அமைந்துள்ள இந்தக் கோயிலில் சுமார் 6 அடி உயரத்தில் நின்ற திருக்கோலத்தில் வராக வடிவம் உருவாக்கப்பட்டுள்ளது. தாயாரின் ஒரு கையில் மலர் காணப்படுகிறது. மாமல்லபுரத்தில் இந்தக் குடைவரைக்

கோயிலில் மட்டும் நாள் பூசை நடை பெற்று வருகிறது. அக்கால வர்ணப் பூச்சு நல்ல நிலையில் உள்ளது. எனவே இந்த வடிவிற்கு அபிடேகம் செய்யப்படுவதில்லை.

அதியமான் மன்னர்களில் குணசீலன் காலத்திய நாமக்கல் குடைவரைக் கோயில்களில் மேற்புறமாக உள்ள கோயிலின் கருவறைக்கு இடதுபுறம் பூவராகம் புடை சிற்பமாக செதுக்கப்பட்டுள்ளது. முகம் மட்டும் வராகமாகவும், ஏனைய உறுப்புகள் மானிட வடிவிலும் உள்ளன. ஆகமங்களில் விதிக்கப்பட்ட 4 கைகளுக்குப் பதில் இங்கு உள்ள வடிவிற்கு இரண்டு கைகள்தான் உள்ளன. வலதுகை மேல் மண்மகள் கூப்பிய கைகளுடன் உட்கார்ந்து இருக்க, இடதுகை தாங்கிக்கொண்டு இருக்கிறது. நான்கு வேதங்களும் மானிட வடிவில் வராகத்தின் தலைக்கு மேல் உருவாக்கப்பட்டுள்ளன. வராகத்தின் காலடியில் பாம்பும் அதன் துணைவியும் காணப்படுகின்றனர். இது வராகம் பாதாள உலகத்தினின்றும் மேலே வருவதைச் சுட்டிக்காட்டுகிறது.

பாண்டியர்களின் குடைவரைக் கோயில்களில் திருப்பரங்குன்றத்தில் மட்டும் இந்த வடிவம் அமைக்கப்பட்டுள்ளது. இங்குள்ள திருமாலின் கருவறையை ஒட்டி வராக வடிவம் உருவாக்கப்பட்டுள்ளது. நின்ற நிலையில் உருவாக்கப் பெற்ற இவனது இடது கால் ஊன்றி, வலது கால் சற்று மேலே தூக்கிய நிலையில் உள்ளது. 4 கைகள் கொண்ட இந்த வடிவின் பின் வலக்கையில் சக்கரமும், பின் இடக் கையில் சங்கும் இருக்க, முன் இடக்கை தொடை மீது உள்ளது. முன் வலக்கை தன் வலது தொடை மீது உட்கார்ந்துள்ள மண்மகளை அணைத்தவாறு காணப்படுகிறது. இவனது காலடியில் நாகராஜனும் அவன் மனைவியும் அமைக்கப்பட்டுள்ளனர்.

வராகத்தை மூலவராகக் கொண்ட குடைவரைக் கோயில் பல்லவர்களால் மட்டுமே உருவாக்கப்பட்டுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

குடைவரைக் கோயில்களில் மட்டுமன்றிக் கற்றளிகளிலும் ஆங்காங்கு வராக வடிவம் காணப்படுகிறது. எடுத்துக்காட்டாக,

" பல வேந்தர் வணங்குகழற்
பல்லவன் மல்லையர் கோன்
பணிந்த பரமேச்சுர
விண்ணகரம் அதுவே

என மங்கை மன்னனால் 10 திருப்பாசுரங்களில் மங்களாசாசனம் செய்யப்பெற்ற காஞ்சிபுரம் வைகுந்தப் பெருமாள் கோயிலில் கருவறையைச் சுற்றிய புறச்சுவர்களில் சுதையாலான வராக வடிவங்கள் காணப்படுகின்றன. ஒன்றில் நாமக்கல் குடைவரைக் கோயிலில் உள்ளது போன்று 4 வேதங்களுடன் ஆனால் தாயார் இன்றி வராகம் காணப்படுகிறது. மற்றொன்றில் தாயாரைத் தன் வளைந்த இடது தொடை மீது வைத்து அமைக்கப்பட்டுள்ளது. இது சென்னையை அடுத்துள்ள திருவிடந்தையில் உள்ள மூலவரைப் போன்ற அமைப்பைக் கொண்டது.

மேலும் சென்னையை அடுத்துள்ள உத்திரமேரூரில் உள்ள பல்லவ காலத்திய புகழ் பெற்ற சுந்தரவரதப்பெருமாள் கோயிலில் திருமாலின் 9 வடிவங்கள் மூலவராக உள்ளன. அவற்றில் ஒன்று பூவராக வடிவம். இங்குள்ள இரண்டாவது தளத்தில் வடக்கு நோக்கி உள்ள கருவறையில் மண்மடந்தையைத் தன் மடிமீது வைத்துக்கொண்டு பூவராகம் காணப்படுகிறது. அவனது 4 கைகளில் பின் இரு கைகளில் சங்கும் சக்கரமும் உள்ளன. முன் வலதுகை நிலமகளின் கால்களைப் பிடித்த நிலையிலும், முன் இடதுகை அவளை அணைத்தவாறும் அமைக்கப்பட்டுள்ளன. இது ஆகம விதிகளுக்கு வேறுபட்டுள்ளது. நிலமங்கை தன் இரு கைகளையும் கூப்பிய நிலையில் காணப்படுகிறாள்.

பூவராகம் மூலவராக உள்ள திருக்கோயில்களில் திருவிடந்தை ஒன்று. இது சென்னையினின்றும் மாமல்லபுரம் செல்லும் வழியில் உள்ளது. "ஏரார் பொழில்சூழ் இடவெந்தை"யை மங்கை மன்னன் மங்களாசாசனம் செய்துள்ளார். "ஏத்துவார் தம் மனத்துள்ளான் இடவெந்தை மேவிய எம்பிரான்" என்று மங்களாசாசனம் செய்யப்பெற்ற மூலவரின் இடதுபுறத்தில் அன்னை இருப்பது இந்தத் தலத்தின் தனிச் சிறப்பு. எனவே இந்தத் தலம் 'திருஇடஎந்தை' எனப் பெயர் பெற்றது. அண்ணல் அன்னைக்கு வலதுபுறம் இருப்பதால், அவன் 'திருவலஎந்தை' என அழைக்கப்பெறுகிறான். ஏனைய இடங்களால் அன்னை அண்ணலுக்கு வலதுபுறம் இருப்பது குறிப்பிடத்தக்கது. கால முனிவரின் 365 பெண்களில் முதல் பெண்ணான கோமளவல்லியை மணந்து கொண்டான். ஏனையோரை அகிலவல்லித் தாயார் என்ற பெயரில் ஒரு வடிவமாக்கி மணந்து கொண்டமையால், இங்குள்ள பெருமாள் 'நித்ய கல்யாணப்பெருமாள்' என்று அழைக்கப்பெறுகிறான். சுமார் 7 அடி உயரமுள்ள இந்த வடிவம் சுதையாலானது என்பது இதன் தொன்மையைக் காட்டுகிறது. நின்ற திருக்கோலத்தில் உள்ள இவனது வலதுகால் நேராகவும், இடதுகால் வளைந்து மனைவியுடன் அமைக்கப்பட்டிருக்கும் ஆதிசேடன் தலை மீது வைக்கப்பட்டுள்ளது. இது பாதாள லோகத்தினின்றும் பூமியை மீட்பதைக் காட்டுகிறது. இவனது 4 கைகளில், பின் வலது கையில் சக்கரமும், பின் இடது கையில் சங்கும் காணப்பட, முன் இடது கையால் தாயாரை அணைத்துக் கொண்டிருக்கிறான். முன் வலக்கை தாயாரின் கால்களைப் பிடித்த நிலையில் உள்

ளது. அண்ணலின் வளைந்துள்ள இடது தொடை மேல் உட்கார்ந்துள்ள அகிலவல்லித் தாயாரின் வலது கையில் தாமரையும், இடதுகை தொடை மீதும் காணப் படுகின்றன. வலது தொடைக்குப் பதில் இடது தொடை மீது தாயார் உட்கார்ந்து இருப்பது ஆகமத்தில் கூறப்பட்டதினின்றும் வேறுபட்டதாகும். வராகத்தை மூலவராகக் கொண்ட மற்ருெரு திருக்கோயில் விருத்தாசலத்தை அடுத்துள்ள ஸ்ரீ முஷ்ணமாகும். தானே தோன்றிய தாகப் போற்றப்படும் 8 வைணவத் தலங்களில் ஒன்ருன இங்கு முகம் மட்டும் வராகமாகவும், உடல் மானிட உடலாகவும் உள்ள மூலவர் மேற்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் காணப்படுகிருன். அவனது முகம் தெற்கு நோக்கி உள்ளது. இந்த வடிவிற்கு இரண்டு கைகள்தான் உள்ளன. அவை கடி முத்திரையில் சங்கு சக்கரத்துடன் அமைக்கப்பட்டுள்ளன. இவனுக்கு வலதுபுறத்தில் திருமகளும், இடதுபுறத்தில் மண்மகளும் உள்ளனர். இவர்கள் மூவரும் ஒரே கல்லில் உருவாக்கப்பட்டுள்ளனர். மூலவரின் நின்ற திருக் கோலத்தில் காணப்படும் மிடுக்கு கண்டு இன்புறத்தக்கதாம். ஏனைய வைணவத்தலங்கள் போலன்றி, இங்கு நாள்தோறும் அபிடேகம் நடைபெறுவது இதன் தனிச் சிறப்பாகும். இந்தத் திருவுரு பூவராகம் எனப் போற்றப்படினும், ஆகமத்தில் விதிக்கப்பட்டபடி மண்மகளை மட்டும் தன் தொடை மீது தாங்கி கைகளால் அணைத்தபடி இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. யக்ஞவராகத்தை மட்டுமே மலர் மடந்தை மற்றும் மண்மடந்தையுடன் அமைக்கலாம். ஆனுல் ஆகமத்தில் இவர்கள் சிங்காதனத்தில் உட்கார்ந்து இருக்க வேண்டும் என்று விதிக்கப்பட்டுள்ளது. இவர்கள் இங்கு நின்ற திருக் கோலத்தில் காணப்படுகின்றனர். இந்தத் திருக்கோயிலில் உள்ள உற்சவர் மானிட முகத்துடன் இரு தேவியருடன் உள்ளான். தாயாரின் வேண்டுகோளுக்கிணங்கி இறைவன் மானிட முகம் கொண்டதாகச் சொல்லப்படுகிறது. இந்த வடிவம் யக்ஞவராகம் என்று அழைக்கப் பெறுகிறது. இவனது பின் கைகளில் சங்கும் சக்கரமும், முன் வலதுகை அபய முத்திரையிலும், முன் இடது கையில் கதையும் உள்ளன. முகம் மானிட முகமாக இருப்பதும், நின்ற திருக்கோலத்தில் இருப்பதும் ஆகம விதிகளுக்கு வேறுபட்டுள்ளன.



ஸ்ரீ ராமலிங்கேஸ்வரர் திருக்கோயில் - இராமேஸ்வரம்.
திருமதி, எம். ராஜ்யலட்சுமி.

திருமால் வராக வடிவில் மண் மடந்தையை அவுணர் பிடியினின்றும் மீட்டு, முன்போல் உயிர்கள் வாழ வழி செய்தான். அரசர்கள் கடமை என்ன என்பதை சேக்கிழார் பெருமான் தமது திருத்தொண்டர் புராணத்தில், மநுநீதிச் சோழன் மூலம்,

"மாநிலங்காவலனுவான் மன்னுயிர்
காக்குங் காலைத்
தான் அதனுக்கு இடையூறு தன்னுல்
தன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தால்
கள்வரால் உயிர்தம்மால்
ஆன பயம் ஐந்தும் தீர்த்து அறங்
காப்பான் அல்லனே" (121)

என வெகு அழகாக எடுத்துக் காட்டுகிருர். இவ்வாறு உலகைப் பல இடையூறுகளினின்றும் காப்பாற்றி மக்கள் நல்வாழ்வு வாழ வழி செய்யும் தங்கள் ஆற்றலை உணர்த்தும் வகையில் இந்த வடிவம் அமைந்துள்ளதாகக் கருதிய முற்கால மன்னர்கள் இதை அதிக அளவில் சிறப்பாக அமைத்தனர் என்பதில் வியப்பு ஒன்றும் இல்லை.



# அருள் பொழியும் அண்ணன் பெருமாள் கோயில்

**आसीत् श्वेततटाकाख्यं अस्मिन्नेव वने महत्।।
वैकुण्ठादुत्तरे भागे माधवस्य तु पश्चिमे ।।
तत्तटाकस्य चेशान्यां महादेवो वृषध्वजः ।
ब्रह्महत्या निवृत्तस्तु ह्यद्यापि परिदृश्यते ।।
विष्णुभक्तो महाभागः सर्वसम्पत्प्रदो हरः ।**

இந்தப் பலாச வனத்திலேயே வைகுந்த விண்ணகரத்திற்கு வடக்கில், மாதவன் எழுந்தருளி இருக்கும் திருத்தேவனுர் தொகையின் மேற்கில் திருவெள்ளக்குளம் என்றதோர் பிரசித்தமான தீர்த்தம் இருக்கிறது. அதன் வடகிழக்குத் திசையில் பிரஹ்மஹத்தி பாபத்தினின்றும் விடுபட்டுப் பரம சுத்தியடைந்தவனுய் பரம பாகவதனுய் ஸகல ஐச்வர்யங்களையும் கொடுக்கும் வன்மையுடையவனுய் விருஷபத்வஜனுன் மகாதேவன் திருமாலே வழிபட்டுக்கொண்டு இன்னும் விளங்கா நிற்கிருன்.

விமானம்—ஸ்வேத விமானம்
புஷ்கரிணி—ஸ்வேத புஷ்கரிணி
ப்ரத்யட்சம்—ஸ்வேத மஹாராஜனுக்குப்ரத்யட்சம்
மங்களாசாசனம்—திருமங்கையாழ்வார்
அவதாரம்—குமுதவல்லிநாச்சியார்

வைணவத்தலங்கள் 108இல் தென்திசையில் குறிப்பிடத்தக்க சிறப்பு வாய்ந்த திவ்ய தேசங்கள் நாங்கை மற்றும் அண்ணன் கோயில் என்னும் திருவெள்ளக்குளம் ஆகும். பெருமாளுக்கு அண்ணன் பெருமாள் என்று திருநாமம். திருப்பதி பெருமாளின் அண்ணன் என்றும் வழக்கு. தஞ்சை மாவட்டத்தில் சீர்காழியிலிருந்து திருக்கடையூர், அனந்தமங்களம், திருநள்ளாறு செல்லும் பஸ் பாதையில் அண்ணன் பெருமாள் கோயில் என்ற ஊரில் இறங்க வேண்டும். மெயின் ரோட்டிலிருந்து கிழக்கே சுமார் ஒரு பர்லாங் தொலேவில் அண்ணன் பெருமாள் ஆலயம் அமைந்துள்ளது. சீர்காழிக்குத் தென்கிழக்கே 6 கிலோ மீட்டர் தூரத்தில் அமைந்துள்ளது. இது ஓர் ப்ரார்த்தனே ஸ்தலமாகும்.

திருப்பதியில் நடப்பதுபோல எல்லா ப்ரார்த்தனேகளும் இங்குச் செலுத்தப்படுகின்றன. திருமங்கை மன்னன் குமுதவல்லி நாச்சியாரைக் கண்டு வந்து திருமணம் புரிந்த இடமும் இதுவே. ஆண்டுதோறும் திருமங்கை மன்னன் இத்தலத்திற்கு எழுந்தருளி மங்களாசாசனம் செய்யப்படுகின்ற ஏற்றத்தை உடைய திருப்பதி. இத்தலம் பலாசவனத்தில், நாகபுரி க்ஷேத்ரத்தின் ஒரு பகுதியாகும். இங்கு முன்பு 'மருத்த முனிவருடைய' ஆச்ரமம் இருந்ததாக வரலாறு. திருமங்கையாழ்வார் தனது மங்களாஸாஸன பனுவல்களில் திவ்ய தேச பெருமை, அடியார் பெருமை, பெருமாள் பெருமை ஆகியவைகளே முறையே ஒவ்வொரு பாசுரத்திலும் நெஞ்சு நெகிழும்படியாக அனுபவித்துப் பாடியுள்ளார்.

இந்த ஸ்தலத்தைப்பற்றிக் கோயில் அர்ச்சகர் ஸ்ரீ. எஸ். ஆர். மாதவபட்டரிடம் கேட்டதற்கு, "ஸ்வேத புஷ்கரிணியில் நீராடி, அண்ணன் பெருமாளே தரிசிப்பவர்களுக்கு ப்ரம்மஹத்தி தோஷமும், நவக்கிரஹ தோஷமும் நீவர்த்தியடையும்" என்ருர்.

கோயில் அமைப்பு :

இயற்கை எழிலுடன் விளங்கும் அண்ணன் பெருமாள் கோயில் கிராமத்தின் நடுவில் திருக்கோயில் அழகாக அமைந்துள்ளது. கோயில் கிழக்கு பார்த்து அமைந்துள்ளது. கோயிலின் எதிரில் 'ஸ்வேத புஷ்கரிணி' உள்ளது. கோயிலில் நுழைந்தால் முதலில் பலிபீடம், துவஜஸ்ஸ்தம்பம், கருடன் ஸன்னதி ஆகியவை உள்ளன. இங்கு ஸேவித்துவிட்டு ப்ரதட்சணமாக தெற்கில் வர கர்பக்ருஹம், அர்தராளம், முன்மண்டபம், மஹா மண்டபம் ஆகிய நான்கு நிலேகளுடன் அமைந்துள்ள தாயார் ஸன்னதியைக் காணலாம். அங்கே வணங்குபவர்களுக்கு எல்லா நலங்களேயும் அளிக்கும் அலர்மேல் மங்கைத் தாயார் காட்சியளிக்கிருள். தாயார் ஸன்னதியின் முன் மண்டபத்தில் வடபகுதியில் ஸ்ரீ குமுதவல்லி நாச்சியாரின் தனிக்கோயில் உள்ளது. அங்கே குமுதவல்லிநாச்சியாரின் உற்சவர் காட்சி தருகிருர். இங்கு அலர்மேல்மங்கைநாச்சியாருக்குபெருமாள் ஸன்னதியில்வலதுபக்கத்தில் தனிஸன்னதி அமைந்துள்ளது இக்கோயிலின் தனிச்சிறப்பாகும். இங்குத் தாயார் ஸன்னதியில் ஆடிகடைவெள்ளியன்று திருக்கல்யாணமும் ப்ரும்ம உத்ஸவ திருக்கல்யாணமும் ப்ரார்த்தனே திருக்கல்யாணமும் ஆண்டு முழுவதும் நடைபெறுகின்றன, இந்தத்தாயார் மிகுந்த சக்தி வாய்ந்தவள். தாயாரை

திரு. உ. வெங்கடேசன், எம்.ஏ.,
வைதீஸ்வரன்கோயில்.

ஸேவித்து விட்டு ப்ரதட்சணமாக ப்ரகாரத்தில் வர மேல் ப்ரகாரத்தில் நின்று தாயார் விமானம், பெருமாளின் ச்வேத விமானம் ஆகியவைகளேக் காணலாம். வடக்கு ப்ராகாரத்தில் மேற்கு பகுதியில் வாகன மண்டபம் உள்ளது. வடக்குப் பிராகாரத்தின் கிழக்குப் பகுதியில் கல்யாணமண்டபமும் அதனேயடுத்து 'யாகசாலேயும்' உள்ளன. பெருமாள் ஸன்னதி விசாலமான கர்ப்பக்ருஹம், அந்தராளம், சோபன மண்டபம், மஹாமண்டபங்களுடன் கூடியதாய் விளங்குகின்றது. கர்ப்பக்ருஹத்தில் பெருமாள் மூலவர் 'அண்ணன் பெருமாளாக' உபயநாச்சி

யார்களுடன் கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் ஸேவை ஸாதிக்கிறார். அருகில் உற்சவர் 'ஸ்ரீநிவாஸனாக' உபயநாச்சியார்களுடன் அருள்பொழியும் அருளாளனாகக் காட்சி தருகிறார். மேலும் கண்ணன், சந்தானகிருஷ்ணன், பஞ்சபேரமூர்த்திகள் ஆகியோரும் அருகே எழுந்தருளியுள்ளனர். திருமங்கையாழ்வார் தமது மங்களாசாஸனம் பதிகத்தில் இவ்வெம்பெருமானை 'பூவார் திருமாமகள் புல்கிய மார்பா' என்றும், பிறவியிலேயே பூமியைப் பிளக்க வல்ல வராஹனாகவும் நெடியானாகவும் கல்லணைக் கட்டியுகந்தசக்ரவர்த்தித் திருமகனாகவும்,கோவர்த்தன உத்தரணம், குவலயாபீடநிரஸனம், ஆநிரை மேய்த்தல் ஆகியவை செய்து ஆர்த்தரக்ஷணம் செய்த க்ருஷ்ணனாகவும், திருவேங்கடமுடையானாகவும், அண்ணன் பெருமாளாகவும், ஆராவமுதனாகவும் அனுபவித்துள்ளார். மேலும் பலவாறு பெருமாளைப்போற்றியுள்ளார்.

### வெள்ளக்குளத்தானும் வேங்கடத்தானும் :

திருமங்கையாழ்வார் திருவேங்கடமுடையானையும் திருவெள்ளக்குளத்தானையும் ஒன்றாகவே பாடியுள்ளார்.

திருமலை ஸ்ரீநிவாஸனைப் பாடும்போது "கண்ணார் கடல் போல்" என்று தொடங்கி "வேங்கட மாமலை மேய அண்ணா! அடியேன் இடரைக் களையாயோ!" என்றார். திருவெள்ளக்குளத்துள் உறையும் ஸ்ரீநிவாஸனைப் பாடத் தொடங்கும்போது "கண்ணார் கடல்"என்று ஆரம்பித்து "திருவெள்ளக் குளத்துள் அண்ணா! அடியேன் இடரைக் களையாயே" என்றார்.

திருவேங்கடமுடையானை "அலர் மேல் மங்கையுறை மார்பா" என்று நம்மாழ்வார் அழைத்ததுபோல திருமங்கையாழ்வாரும் "பூவார் திருமாமகள் புல்கிய மார்பா" என்று அழைக்கிறார். "வேடார் திருவேங்கடம் மேய விளக்கே" என்று அபேதமாக விளிக்கின்றார்.

திருவேங்கடத்து பதிக திருமுக பாசுரத்தில் "கலியன் சொன்ன மாலை வல்லாரவர் வானவர் ஆகுவர் தாமே" என்று அருளிச் செய்தார். திருவெள்ளக்குளத்துப் பதிகத்தின் நிறைவாக 'கலியன் சொன்ன மாலை வல்லரென வல்லவர் வானவர் தாமே' என்று தலைக்கட்டுகிறார்.

### அண்ணன் பெருமாளின் அருள் :

திருமங்கையாழ்வார் முன்பு தான் திருவேங்கடமுடையானிடத்தில் "அடியேன் இடரைக் களையாயே" என்று செய்த ப்ரபத்தி திருவெள்ளக்குளத்தில் த்வாயார்ந்த நிஷ்டையில் நின்று மனமுருகப் பாடினார். இவர் பாடலைக் கேட்ட அண்ணன் பெருமாள் ஆழ்வாரை கடாக்ஷித்து அருளினார். திருமலைக்கு ஒப்பாக இங்கு ப்ரார்த்தனைகள் செலுத்தப்படுகின்றன. கல்யாண மாதங்களில் பல கல்யாணங்கள் நடைபெறுகின்றன. நீண்ட ஆயுள் பெற இங்கு ஆயுள் ஹோமம் பலர் செய்வதாக பக்தர்கள் கூறுகிறார்கள். அண்ணன் பெருமாள் சுவேத மஹாராஜனை ரக்ஷித்து அவனை சிரஞ்சீவியாக்கினார் என்று திருவெள்ளக்குளம் ஸ்தல புராணம் கூறுகிறது. முன்பு ஒரு காலத்தில் சூர்ய வம்சத்தில் துந்துமாரன் என்று ஒரு அரசனுக்கு சுவேதன் என்ற ஒரு மகன் இருந்தான். அவனுக்கு ஒன்பதாவது வயதில் மரணம் ஏற்படும் என்று குலகுருவான வசிஷ்டர் உணர்ந்தார். இதனை அறிந்து அவ்வரசன் வசிஷ்ட முனிவரை அணுகி, அகால ம்ருத்யுவை வெல்லும் உபாயத்தை உபதேசிக்க வேண்டினான். முனிவரும் அவனைக் காப்பாற்ற எண்ணி ஸகல க்ஷேத்ரங்களிலும் சிறந்த நாகபுரம் என்கிற நாங்கூர் க்ஷேத்ரத்திற்கு சென்று தவம் புரியச் செய்தார். பின்பு முனிவரும் அங்குச் சென்று அங்கு நித்ய வாஸம் செய்யும் முனிவர்களிடம் சுவேதனின் நிலைமையைக் கூறினார். அவர்கள் தெரிவித்தபடி ம்ருத்யுஞ்ஜய மந்திரத்தை உபதேசித்து பலாச வனத்தின் ஒரு பகுதியில் தாமரைக் குளத்தின் மேற்கிலமைந்த ஸ்ரீநிவாஸப்பெருமாள் ஸன்னதியின் அருகிலுள்ள மருத்தருடைய ஆச்ரமத்திற்குச் சென்று மருத்தரோடு தினமும் புஷ்கரிணியில் நீராடி, ஸ்ரீநிவாஸப் பெருமாளை வணங்கி புஷ்கரிணியின் தென் பாகத்திலுள்ள வில்வ மரத்தடியில் வடக்கு நோக்கி இருந்து ம்ருத்யுஞ்ஜய மஹா மந்திரத்தை ஜபிக்கலானான், ஐப்பசி மாதம் வளர்பிறை தசமி தொடங்கி கார்த்திகை மாத வளர்பிறை ஏகாதசி வரை ஒரு மாத காலம் தவமியற்றினான். சுவேதனின் கடுந்தவத்தைக் கண்டு மனமிரங்கிய ஸ்ரீநிவாஸப்பெருமாள் கார்த்திகை மாத கைசிக ஏகாதசி நன்னாளில் அவன் முன் தோன்றி அவனுக்கு நீண்ட ஆயுளைக் கொடுத்து மரண பயத்தினின்றும் காப்பாற்றி அருள்பாலித்தார். சுவேதன் பல்லாண்டு வாழும் வரம்பெற்றான். ஐப்பசிமாதம் சுக்லபக்ஷ தசமி தொடங்கி கார்த்திகை மாத சுக்ல பக்ஷ ஏகாதசி வரையில் யார் இந்த க்ஷேத்ரத்தில் தங்கி இத்தீர்த்தத்தில் நீராடிப் பெருமாளை ஸேவை செய்கிறார்களோ அவர்களுக்கும் ம்ருத்யு பயமே கிடையாது. மறுபிறவி இல்லை. கன்னிகைகள்நல்லகணவனையும், குழந்தைப்பேறுஇல்லாதவர்கள் நன்மக்கட்பேற்றினையும், மற்றவர்கள் செல்வத்தையும் அடைவதாக பெருமாள் அருளியதாக ஸ்தலபுராணம் கூறுகிறது. இதனை ஒட்டி பலர் ஐப்பசி மாதத்தில் இங்கு வந்து ஒரு மாத காலம் தங்கி இக்குளத்தில் நீராடி பெருமாளை ஸேவித்துப் பல நலன் களைப் பெற்று வருவதாக பக்தர்கள் பலரும் கூறுகின்றனர்.

### தீர்த்தச் சிறப்பு

சுவேதன்,பெருமாள் அருள்பெற்ற வரலாற்றை ஒட்டி இந்த புஷ்கரி

ணிக்கு 'சுவேத புஷ்கரிணி' என்று பெயர் ஏற்பட்டதாகக் கூறுகிறார்கள். தமிழ்மொழியில் 'திருவெள்ளக் குளம்' என்று அழைக்கப்படுகிறது. கோயிலின் முன்னால் புஷ்கரிணி உள்ளது.

இக்குளத்திலுள்ள குமுத மலர்களைக் கொய்து மகிழ தேவ மாதர்கள் வருவது வழக்கம். ஒருநாள் ஒரு தேவ மாது மனிதனின் பார்வைக்கு இலக்காகி தேவலோகம் செல்லும் சக்தியையிழந்து இங்கேயே தங்க நேர்ந்தது. இதனைக் கேள்விப்பட்ட திருமங்கை மன்னன் இங்கு வந்து இவளை மணம் புரிய விரும்பினார். அவளும் இசைந்து அவரை வைணவ அடியார்க்கு அன்னம் பாவிக்கும் நற்செயலில் ஈடுபடச் செய்து திருமங்கை ஆழ்வாராக மாற்றி, பக்தி மணம் வீசும் பனுவல்களால் அர்ச்சாவதார எம்பெருமான்களை உகப்பிக்கச் செய்தார். மங்கை மன்னனைத் திருமங்கையாழ்வாராக ஆக்கியதற்கு ஆதாரமாக அமைந்தது இத்திருவெள்ளக்குளமே.

ஸ்ரீநிவாஸ பக்த ஸபா

அண்ணன் பெருமாள் கோயிலில் திருப்பணிகள் செய்யவும், கோயிலை நன்முறையில் பராமரிக்கவும் ஏற்படுத்தப்பட்டது இந்த ஸபா. இதன் செயலர் ஸ்ரீ எஸ், ஆர். மாதவபட்டர். இந்த ஸபா தொடங்கப்பட்டு ஆலயத்தில் செய்யப்பட்ட பல நற்பணிகளை விவரித்தார். வாகனங்கள் பழுது பார்த்து வண்ணம் வைத்ததாகவும், பிராகாரங்களில் சிமெண்டு தளவரிசை போடப்பட்டதாகவும், பெருமாள் ஸன்னதியில் அர்த்தமண்டபம், மஹாமண்டபம், வாத்யமண்டபம் ஆகியவைகளுக்கு மொசைக் தளம் போடப்பட்டதாகவும், பெருமாள் ஸன்னதி திருப்படிக்கட்டுகளுக்குப் பித்தளைத் தகடுகள்போடப்பட்டதாகவும் கூறினார். மேலும் ஸபாவில் சேர ஆயுள் சந்தா ரூ. 301 என்றும், ஆயுள் சந்தா கட்டிய அங்கத்தினர் விரும்பும் ஒரு நாளில் எம்பெருமானுக்குத் தளிகை சமர்பித்து அர்ச்சனை செய்து பிரசாதம் அனுப்பப்படுகிறது என்றார். தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி: "ஸ்ரீநிவாஸ பக்தஸபா, திருவெள்ளக்குளம், அண்ணன்பெருமாள் கோயில் (அஞ்சல்) சீர்காழி தாலுக்கா—609109"

திருவிழாக்கள்

புரட்டாசி மாதத்தில் 10 நாட்கள் ப்ரம்ம உற்சவம். திருவோணத்தில் திருத்தேரும், தீர்த்தவாரியும், மறுநாள் தெப்ப உற்சவமும் நடைபெற்று வருகின்றன.

வைகாசி மாதத்தில் முதல் ஐந்து தினங்கள் பெருமாளுக்கு வசந்த உற்சவமும் கடைசி ஐந்து தினங்கள் தாயாருக்கு வஸந்த உற்சவமும் நடைபெற்று வருகின்றன.

தைமாதத்தில் திருமங்கையாழ்வார் எழுந்தருளி பல்லாண்டு தொடங்கி மங்களாசாஸனம் செய்ததிலிருந்து 5 நாட்கள் திரு அத்யயன உத்ஸவம் நடைபெறும்.

கார்த்திகைமாதம் சுக்ல பக்ஷ கைசிக துவாதசியன்று, சுவேதமஹாராஜாவுக்கு ஸேவை ஸாதித்ததின் நினைவாக ஆண்டுதோறும் உதய கருடஸேவை நடைபெறும்.

அண்ணன் பெருமாள் தன்னை நாடி வரும் பக்தர்களின் பாவங்களைப் போக்கி, தீராத நோயையும் தீர்த்து வைத்து, ஸகல ஐச்வர்யங்களையும் அளிப்பதால் பக்தர்கள் அடிக்கடி ப்ரார்த்தனை உத்ஸவங்களை நடத்துகிறார்கள்.

பக்தியுடன் வந்து வணங்கும் பக்தர்களுக்கு நீண்ட ஆயுளையும், பல வகை நலங்களையும் அளிக்கும் அண்ணன் பெருமாளை நாமும் வழிபட்டு அருள் பெறுவோமாக!

---

குறிப்பு; (மேலே உள்ள கட்டுரையை எழுத பெரிதும் உதவியது, "திருவெள்ளக்குளம் ஸ்தல வரலாறு சுருக்கம்" என்ற கட்டுரை ஆகும்)

*



ஆழ்வார் திருக்குளம் - திருமலை.

# சிவாலய வழிபாட்டு முறை

திருமதி. கமலவேணி தனபதி.



திருக்கோயிலுக்கு வழிபாட்டிற்குச் செல்லும் அன்பர்கள் நம் முன்னோர்களால் வகுத்த கீழே குறிப்பிட்டுள்ள நெறிமுறைகளைக் ,கடைப்பிடித்து முறையுடன் வழிபாடு செய்து இறைவன் திருவருள் பெற்று அவ்அருள் வழி நின்று உய்ய வேண்டுகிறேம்.

வழிபாட்டிற்குச் செல்லுமுன் நீராடி, தோய்த்துலர்ந்த ஆடையுடுத்தி, திருநீறு உருத்திராக்கம் முதலிய சமயச் சின்னங்கள் தரித்து புறத்தூய்மை செய்து கொள்ளுதல் வேண்டும். கோயிலை அடுத்ததும் கை, கால்களை மீண்டும் தூய்மை செய்து கொண்டு திருக்கோபுரத்தின் முன் சென்று இரு கைகளையும் தலைமேற் குவித்து, கோபுரத்தைத் தூல லிங்கமாக வழிபடவேண்டும். முதலில் வழிபட வேண்டியது திருகோபுரமே.

கோபுர வாயிலைக்கடந்ததும், மனம் இறை நினைவைத் தவிர வேறென்றிலும் ஈடுபடுதல் கூடாது. வாயால் ஐந்தெழுத்தையோ, தேவாரம், திருவாசகம் போன்ற பக்திப் பாடல்களை ஓதி வருதல் வேண்டும். உரக்க, அடுத்தவர்களுக்கு இடைஞ்சலாயும் இவை இருக்காவண்ணம்இருத்தல்வேண்டும். வழிபாடு முடியும் வரையிலும் எந்த விதமான பேச்சுக்களும் இருத்தல் கூடாது.

கொடி மரத்தினருகில் சென்றதும் ஆண்கள் அட்டாங்கத்துடனும் (தலை, முகவாய், புயங்களிரண்டு, செவியிரண்டு, கையிரண்டு ஆகிய எட்டு உறுப்புக்களும்) பூமியிற்படிய வழிபடுதல் வேண்டும். பெண்கள் பஞ்சாங்கத்துடனும் (தலை, இருகைகள், இரு முழந்தாள்கள் ஆகிய ஐந்து உறுப்புக்களும்) பூமியிற்படிய வழிபடுதல் வேண்டும். பணிந்து (பூமியிற் படிந்து) மெதுவாக வழி படுதல் வேண்டும்.

கொடிமர தெரிசனத்திற்குப்பின் திருக்கோயிலை வலமாக வந்து பலிபீடத்தினருகில் சென்று காம குரோதாதிகளைப் பலியிட்டதாக உறுதி செய்து கொண்டு நந்தி தேவரிடம் சிவபெருமான் கிருபை பெற அனுக்கிரகம் செய்ய வேண்டுமென்று வேண்டிக்கொண்டு திருக்கோயிலினுள் நுழைதல் வேண்டும்.

திருக்கோயிலுக்குள் சென்றதும் முதற்கண் விநாயகரை வழிபடுதல் வேண்டும். வழிபாடு தடங்கலின்றி இனிதாக அமைய விநாயகரை வழிபடுதல் அவசியம். இதன்பின் துவார பாலகர்களிடத்திலும் சிவபெருமான் கிருபை பெற அருள் செய்ய வேண்டிக் கொண்டு சந்நிதிக்குள் செல்ல வேண்டும்.

சந்நிதியில் "ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள" எனவரும் சேக்கிழார் பாடலை நினைவிற்கொண்டு இறைவன் திருஉருவத்தைத் தம் மனத்தகத்தே இருத்திக் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்க வழிபடவேண்டும்.

சிவதரிசனம் செய்யும் போழ்து நந்தி தேவர்க்கும், சிவலிங்கத்திற்கும் மத்தியில் செல்லுதலும், வழிபாட்டிற்குப்பின் புறங்காட்டி வருதலும் கூடாது. பலிபீடத்திற்கும், சந்நிதிக்கும் மத்தியில் மற்ற எவரையும் வணங்குதல் கூடாது.

மேற்கூறிய வண்ணம் அம்பிகை சந்நிதியிலும் வழிபடுதல் வேண்டும். சிவாலயத்தில் மூல லிங்க வழிபாட்டிற்கு பின் கூத்தப்பெருமான், சோமாஸ்கந்தர், சந்திரசேகரர், முருகன், தென்முகக்கடவுள், நால்வர்கள் சண்டேசுரர் முதலிய மூர்த்திகளையும் வழிபடுதல் வேண்டும்.

சண்டேசுரர் வழிபாடே இறுதியாகச் செய்தல் வேண்டும். வழிபாட்டின் பயனைத் தந்தருளுமாறு இவரை வேண்டிக் கொள்ளவேண்டும். எப்பொழுதும் சிவத்தியானத்தில் இவர் இருப்பதால் மூன்று முறை கையை மெல்லக் கொட்டி நம்மைப் பார்ப்பதாகப் பாவித்துத் தெரிசிக்கவேண்டும். இவரை இடப் பக்கமாகவே வந்து தெரிசிக்க வேண்டும்.

பின்பு மீண்டும் கொடி மரத்தினருகில் வந்து அட்டாங்க வணக்கம் செய்து ஆங்கோரிடத்தில் அமர்ந்து மூலமந்திரத்தை உச்சரிக்கவேண்டும். பிழைகளெல்லாவற்றையும் பொறுத்து, தம்மை ஆட்கொண்டருள ஆண்டவனை வேண்டி வழிபாட்டை முடித்துக் கொள்ள வேண்டும். ॐ

**குரு ஓர் இன்றியமையாத வழிகாட்டி :**

சிவனும் சீவனும் ஒன்று என்பர் பெரியோர். ஆகவே, ஆன்மாவுக்குத் தெய்வத் தன்மை உண்டு.

இத்தெய்வத் தன்மை துலங்காத படி, ஆறு பகைக் குணங்கள் ஆன்மாவை மூடி விடுகின்றன. 1. காமம் (ஆசை), 2. குரோதம் (கோபம்), 3. லோபம் (கருமித் தன்மை) 4. மோகம் (மயக்க உணர்ச்சி), 5. மதம் (ஆணவம்), 6. மாற்சரியம் (பிறர் மீது வெறுப்பு) என்பன அந்த பகைக் குணங்களாகும். பகைக் குணங்கள் மூடும் மறைப்பை நீக்க, பிறவி வந்து நேரிடுகிறது; உலக அனுபவங்களும் வாய்க்கின்றன.

# குருவருள்

மேலே குறிப்பிட்ட பகைக் குணங்களால், நம்மிடம் அண்டும் மாசு நீங்கி, இறைவனிடம் நம்மை எடுத்துச் செல்ல வழிகாட்டி தேவை. இல்லறத்திலே ஈடுபடும் நாம், அவ்வப்பொழுது முறை தவறி நடப்பது இயல்பு. நமது குடும்பக் கடமைகளையும் உலகக் கடமைகளையும் தர்ம நெறிப்படி செய்து வரவும், அதே சமயம் கடவுள் பக்தியை வளர்த்து வரவும் ஒரு வழிகாட்டி-குரு தேவை அவரது அருளும் தேவை.

இக்கருத்தைப் பின்வரும் உதாரணங்களால் விளக்கலாம்; கனமான சுமையைத் தலையில் வைத்துச் செல்லும் ஒருவன் கல்யாண ஊர்வலத்தையும் மகிழ்ச்சியோடு பார்ப்பானுகில், தனது தலைச் சுமையை அவன் பொருட்படுத்த மாட்டான். உடல் பலமுள்ளவனுக்கே அது சாத்தியப்படும். அதுபோல், ஆன்மீக பலம் இல்லாதவன் குடும்ப/உலகக் கடமைகளைச் செய்து வருவதற்கிடையில், கடவுள் பக்தியை வளர்க்க முடியாது. ஆன்மீக பலம், குரு மூலம் வாய்க்கும்; வளரும்.

சேற்றுமீன் சேற்றிலிருந்தாலும், அதன் உடலில் சேறுபடிவதில்லை. அதுபோல் ஆன்மீக பலமுள்ளவன் இல்லற/உலகக்கடமைகளுக்கிடையில் பந்த பாசங்களில் அகப்பட்டுக் கொள்ள மாட்டான். அதற்கு, குரு வழிகாட்ட வேண்டும்.

**குரு எத்தன்மையவர்?**

இவ்வுலகில் பிறக்கும் நம் எல்லோருக்கும் குரு உண்டு. நம் தாயும் தந்தையுமே நமது முதல் குரு. நமக்கு உடல் பிறவியைத் தந்தும், உடல் வளர்ச்சியைப் பேணியும், வாழ்க்கையின் ஆரம்பக் கட்டங்களில் நம்மை வழி நடத்திச் செல்லும் குரு நமது தாய்-தந்தையரே.

பின்னர், கல்வி கற்க நாம் முற்படும்போது, அறிவு என்ற வித்தினை நம் உள்ளத்தில் ஊன்றுகிறார் குரு. இவ்வகையில் நமக்கு இரண்டாவது பிறவி தருகிறார் அவர். ஆகவே குரு, பிரம்மாவிற்கு இணையாகிறார்

அறிவு என்ற வித்தினை ஊன்றிய பின், நமது உள்ள வளர்ச்சியைப் பேணுகிறார் குரு. இவ்வகையில், உலகைப் பேணும் விஷ்ணுவுக்கு இணையாகிறார் குரு.

அறியாமையைக் களைகிறார் குரு. தோற்றத்துக்கு வந்த உலகம் வளர்ந்து, பின்னர் சிவனால் ஒடுக்கப்படுவது போல, நம் அறியாமையை ஒடுக்குகிறார்/களைகிறார் குரு. ஆகவே, அவர் சிவனுக்கு இணை.

இப்படி குருவானவர் பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய கடவுளர்க்கு இணை என்பது உறுதி. இக்கருத்தை வலியுறுத்துவதே பின்வரும் சுலோகம்:

குரு ப்ரம்மா குருவிஷ்ணு:
குரு தேவோ மஹேஸ்வர:
குரு ஸாக்ஷாத் பரப்ரம்ம
தஸ்மை ஸ்ரீகுரவே நம:

சைவத்திலே தென்திசைக் கடவுளும் (தக்ஷிணாமூர்த்தி) வைணவத்திலே கண்ணனும் குருவாகப் போற்றப்படுகின்றனர் நம்போல் பிறந்து வளர்ந்து மடிந்து உலகம் போற்றும் குருமார்களாக விளங்கியவர்கள் ஆதி சங்கரர், மத்வாசாரியார், ராமானுஜர் ஆகியோராகும்.

இனி சில வினாக்களை எழுப்பி விடை காண்போம்.

பந்த பாசங்களுக்குட்பட்டு இல்லறக் கடமைகளைச் செய்து வரும் போது, கடவுள் பக்தியை வளர்க்க முடியுமா என்பது கேள்வி.

அதற்கு விடை 'ஆம்' என்பது தான். ஆனால், அதற்கு ஒரு நிபந்தனை உண்டு சில ஆன்மீக ஒழுக்கங்களை (அனுஷ்டானங்களை) நாம்

பேராசிரியர் என். வேணுகோபால்,
மதுரை.

கடைப்பிடிக்க வேண்டும். வருடத்திற்கொரு முறையோ ஆறுமாதம்/மாதமொரு முறையோ, வசதிக் கேற்ப தனிமையில் இருந்து பழக வேண்டும். அப்பொழுது முழு மனதையும் ஆண்டவன் பால் திருப்ப வேண்டும்.

"இறைவா, உன்னிடத்தில் பக்தி கொள்ளும் விருப்பம் என் உள்ளத்தில் உதிக்க வேண்டும்."

"இவ்வுலகில் என்றென்றைக்கும் எனக்குச் சொந்தமானவர்கள் என்று யாருமில்லை. காசு, பணம் இருந்தால் உறவு கொண்டாட வருவார்கள். அப்படி வருபவர்களும் சில நாள் தான் இவ்வுலகில் இருப்பார்கள். நீ ஒருவனே என்றும் உள்ளவன். நீ ஒருவனே எனக்குச் சொந்தம். நீயே எனக்கு அனைத்துமாவாய். நான் உன்னை எப்படி அறிவேன்?"

இப்படி, தனிமையில் உள்ளவன் மனம் உருகி, தனக்குத் தானே சொல்லிக் கொள்ள வேண்டும்.

கடவுள் பக்தி செய்பவனால் உலகுக்கு யாதொரு இடையூறும் வராதா என்பது ஒரு கேள்வி.

இதற்கு விடை 'வராது' என்பதாகும்.

உலகம் அவனுக்கு இடையூறு செய்ய முடியுமா என்றால் 'முடியாது' என்பதே விடை.

தன் கடமைகளைச் செய்து கொண்டும் கடவுள் பக்தியில் ஈடுபட்டும் வருபவன், கையில் எண்ணெய் பூசிக் கொண்டு பலாப்பழம் அறுப்பவனுக் கொப்பாவான். அப்படிப் பூசிக் கொண்டால், பலாப் பழப் பிசின் கையில் ஒட்டாது. பந்த பாசங்களும் பக்தி செய்பவனுக்கு இடையூறு செய்ய முடியாது.

உள்ளத்தை அமைதியாக வைத்திருந்து கடவுள்பால் அதைச் செலுத்திப் பழக்கப்படுத்தினால் உலகத்தோடு மனம் கலக்காது; ஒட்டாது; அலையாமல் தனித்து இருக்கும். போகும் பாதையும் தவறாது.

ஒரு சமயம் கல்கத்தாவில் இருந்த உண்மையான பக்தர் ஒருவருக்கு ஒரிஸ்ஸாவிலுள்ள பூரி ஜகந்நாதரைக் காண ஆவல் மேலிட்டது. யாரையும் கேளாமல், தெற்கே செல்லாமல், தன் போக்கில் மேற்கே பயணம் கொண்டார். தட்டுத் தடுமாறி, ஆங்காங்கே வழி கேட்டு பின்னர் பூரி வந்தடைந்தார். மக்கள் வழி சொல்லியதால் பூரி வந்தது; சுவாமி தரிசனமும் கிடைத்தது. ஆக நம் வாழ்வில் ஆன்மீகக் குறிக்கோளை அடைய இல்லற, உலகக் கடமைகளைச் செய்வதற்கிடையில் கடவுள் பக்தியை வளர்க்க குருவானவர் நம்மை வழி நடத்திச் செல்ல வேண்டும்.

வழி தெரியாவிட்டாலும், உண்மையான ஆவல் இருக்குமானால், சரியான வழியை யாராவது காட்டுவார்கள்-குரு காட்டுவார் என்பது திண்ணம்.

**குருவருள் எத்தன்மையது?**

இவ்வுலகில் நம்மைத் தடுத்தாட்கொள்ளவும் நல்வழிப்படுத்தவும் குருவருள் பயன்படுகிறது.

விவேகானந்தரின் தந்தை காலமான பின் குடும்பத்தில் வறுமை வந்தெய்தியது. உடல் மெலிந்தும், தலைவலி ஏற்பட்டும் பல நாட்கள் தக்ஷிணேஸ்வரம் போய்த் தமது குருவைக் (இராமகிருஷ்ணரை) காணாதிருந்தார் விவேகானந்தர். கவலைப்பட்ட குரு, நேரே கல்கத்தா போய், சீடனைக் கண்டு விவரம் கேட்டபின், விவேகானந்தரின் தலையைத் தொட்டதும் பிணி விலகியது.

தமது குடும்ப வறுமை நீங்க, தேவியிடம் தமக்காக வேண்டிக் கொள்ளும் படி, ராமகிருஷ்ணரிடம் விவேகானந்தர் முறையிட்டார். விவேகானந்தரையே தேவியிடம் வேண்டும் படி குரு கட்டளையிட்டார். மூன்று முறை முயன்றும், விவேகானந்தர் தமது வேண்டுதலைத் தேவியிடம் தெரிவிக்கவில்லை. 'நாலு முழத் துணிக் காகவும் உண்ணும் நாழி அரிசிக்காகவும் எல்லாம் வல்ல ஜகந்மாதாவிடம் கேட்க மனம் வரவில்லை' என்று குருவிடம் விவரமும் தெரிவித்தார் விவேகானந்தர். ஆனாலும், குருவருள் இருந்ததனால், திருவருள் ஏற்பட்டு நாளடைவில் குடும்பத்திற்குரிய பொருள்கள் விவேகானந்தருக்குக் கிடைக்கத் தொடங்கின.

"வேறெதையும் எண்ணாது எவனொருவன் எப்பொழுதும் என்னையே வழிபடுகிறானோ, அவனது யோக க்ஷேமத்தைப் பற்றிய பொறுப்பை நானே ஏற்றுக் கொள்கிறேன்" என்று கூறுகிறார் கண்ணபிரான்.

ஒரு சமயம் செல்வர் ஒருவரிடம் விவேகானந்தருக்கு உதவும்படி ராமகிருஷ்ணர் கூறினார். தமது குடும்ப வறுமையைப் பற்றிப் பிறரிடம் கூறியதற்குக் கோபப்பட்ட விவேகானந்தரிடம் இராமகிருஷ்ணர் "குழந்தாய்! நான் உனக்காக வீடு வீடாகச் சென்று பிச்சைக் கேட்கவும் தயாராய் இருக்கிறேன் என்பதை நீ அறியாயா?" என்று கூறினார். இதைக் கேட்டதும் விவேகானந்தர் குழைந்து போனார். "குருவின் களங்கமற்ற அன்பு என்னை அவருக்கு என்றென்றும் அடிமையாக்கிவிட்டது" என்று பின்னர் விவேகானந்தர் கூறினார்.

பிறிதொரு சமயம் "நரேந்திரா! (விவேகானந்தருக்குத் தாய் தந்தையர் வைத்த பெயர்) உன்னைப் புறங் கூறுவோரைப் பற்றி நீ என்ன நினைப்பாய்?" என்று இராமகிருஷ்ணர் தம் சீடரிடம் கேட்டார். 'சில நாய்கள் என்னைக் கண்டு குரைக்கின்றன என்று நினைப்பேன்' என்றார் சீடர். குலுங்கக் குலுங்கச் சிரித்தார் குரு. 'குழந்தாய்! இவ்விஷயத்தில் நிதானம் வேண்டும். வசவு கூறுவோர் உள்ளத்திலும் புனிதமானோர் உள்ளத்திலும் நாராயணரே உள்ளார். மறவாதே" என்றார் இராமகிருஷ்ணர்.

பின்னாளில் விவேகானந்தர் பெற்ற பெருமைகளைக் கண்டு சகியாதவர்களிடத்தும், வசவு கூறினவரிடத்தும், விவேகானந்தர் அன்புடனும் அனுதாபத்துடனும் நடந்து கொண்டதற்கு இராமகிருஷ்ணரின் மேற் குறித்த உபதேசமே காரணம்.

இப்படிக் குருவருளால், பிணி நீங்கும்; வறுமை குறையும்; நிதானம் (விவேகம்) ஏற்படும் என்பதை இராமகிருஷ்ணர்-விவேகானந்தர் வரலாற்றிலிருந்து நாம் தெரிந்து கொள்கிறோம்.

முடிவுரை: அருள் துறையும் பொருள் துறையும் ஒன்றோடொன்று மோதுமே தவிர அவை ஒத்துப் போகா என்பது சாதாரணமாக எல்லாரும் கருதுவது வழக்கம். ஆனால், குருவருள் இருந்தால், அவை முரண்பட மாட்டா; சுமுகமாக இணையும். அப்படி இணையும்போது, உலகம் மேன்மையுறும். எல்லோரும் நல்லவராவர். பிர்லா போன்ற பெரும் பணக்காரர்கள் காந்தியடிகள் பால் ஈர்க்கப்பட்டு அறவழியிலான செலவுகளைத் தாராளமாக மேற்கொண்டதை நம் வாழ்வில் நாம் கண்டிருக்கிறோம். ஆக, குருவருள் கிட்டினால், திருவருள் கூடும் என்பது திண்ணம். 卐

# கருத்து ஒன்று தத்துவம் இரண்டு

திரு. எம். எஸ். பிச்சுமணி
சென்னை.

சிவன் இல்லாமல் சக்தி இல்லை. சக்தி இல்லாமல் சிவன் இல்லை. எனவே சிவசக்தியின் ஒற்றுமை பெரியோர்களால் எடுத்துக் காட்டப் பட்டுள்ளது. சில சமயங்களில் தத்துவமாகவும் உபதேசிக்கப்பட்டுள்ளது. இக்காலத்தில் நமக்கு அர்த்த நாரீஸ்வரனைக் காட்சியளித்து வருகின்றது.

பெருமாள் இல்லாமல் தாயார் இல்லை. தாய் இல்லாமல் பெருமாள் இல்லை. எனவே இப்பெரும் சக்திகள் இணைந்து ஸ்ரீநிவாசனை இன்றும் நமக்கு திருமலையில் காட்சி அளித்துக் கொண்டிருக்கிறது.

எனவே இரண்டு அம்சங்களும் இணைந்தே இருக்க வேண்டும் என்றே வலியுறுத்தப்பட்டு விட்டது.

இதேபோல் சமயங்கள் பல விருந்தாலும் சிவ வைணவ மதங்கள் ஒன்று கூடி இயங்க நமது ஆன் மீகப் பெரியார்கள் பல கதைகள் மூலம் சிந்திக்க வைத்தார்கள். ஹரி ஹரன் என்ற தத்துவ விளக்கத்தை சிவ வைணவ ஒற்றுமைக்காகவே எடுத்தும் காட்டினார்கள். சங்கர நாராயணனைக் காட்சியளிக்கும்படி செய்தார்கள்.

ஹரிகதை - ஹரிநாமம் என்ற அடிப்படைத் தத்துவத்தின் மூலம் "மஹாவிஷ்ணுவின்" பரந்த உள்ளத்தை கதைகள் மூலம் எடுத்துச் சொன்னார்கள்.

சிவஞானம் - சிவயோகம் என்ற தத்துவ அடிப்படையின்மூலம் சிவ பெருமானின் சிறந்த செயலை எடுத்துக் காட்டினார்கள்.

மஹாவிஷ்ணு "கண்ணன்" என்ற திருப்பெயரோடு அவதாரம் செய்து உலகத்தை வாழச் செய்தான்.

சிவபெருமான் "முக்கண்ணனாக" அமர்ந்துகொண்டு தீயசெயல்களை எரித்து தர்மத்தை வளரச்செய்தான்.

நீலக்கண்ணனாக உருவெடுத்து, நீல மேக சியாமளனாக பெயர் பெற்று "சிந்தனைகளை"த் தூண்டி விட்டவன் மகாவிஷ்ணு.

ஆலகால விஷத்தைத் தானே உண்டு நீலகண்டனாக தோற்றம் பெற்று "ஆனந்தத்தை" அளித்தவன் சிவபெருமான்.

மாடுமேய்க்கும் கண்ணனாக, இடையர் குலத்தலைவனாக அமர்ந்துகொண்டு அனுதினமும் அனுகிரகத்தைக் கொடுத்துக் கொண்டிருந்தவன் விஷ்ணு.

மாட்டையே தன் வாகனமாகக் கொண்டு வீதிதோறும் வலம்வந்து வெற்றியைக் கொடுத்துக் கொண்டிருந்தவன் சிவன்.

குழலூதும் கண்ணனாகக் காட்சியளித்து ராகத்துடன் இசையமைத்து கோபியர்களைக் கொண்டாடச் செய்தவன் மகாவிஷ்ணு.

உடுக்கை அடித்து தாளத்துடன் நடனமாடி மக்களை மகிழ்வித்தவன் தாண்டவமூர்த்தியான சிவன்.

மலையைத்தூக்கி, மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்த்தியவன் மாயப்பிரானான மகாவிஷ்ணு.

மலைமேலேயே இருந்துகொண்டு - மகேந்தரகிரி நாதனைகப்பெயர்பெற்று தத்துவத்தை எடுத்துக் காட்டியவன் சிவபெருமான்.

லோகத்தின் குருவாக அமர்ந்து கொண்டு கீதையை உபதேசித்து "கீதாசார்யனாக" புகழ் பெற்றவன் மகாவிஷ்ணு.

உலக மக்களுக்கு உபதேச குருவாக அன்றும், இன்றும், என்றும் அலங்கரித்துக் கொண்டிருப்பவன் "தட்சிணாமூர்த்தி"யான சிவபெருமான்.

அரங்கனாகப்பள்ளி கொண்ட பெருமானாக திருவரங்கத்தில் துயில் கொண்டவன் பரந்தாமன்.

சபாபதியாக நடனமாடும் நடராஜனாக சிதம்பரத்தில் ஆடி மகிழ்விப்பவன் பரமேஸ்வரன்.

அரங்கனைப் போற்றித் துதித்தவர்கள் ஆழ்வார்கள்.

நடராஜனையே பாடித் துதித்தவர்கள் நாயன்மார்கள்.

தட்பத்திற்குத்தலைவனாகித்தண்ணீரின் மேல் பள்ளி கொண்டவனாகக் காட்சியளிப்பவன் கார்மேகவண்ணன்

வெப்பத்திற்கு அதிபதியாகி வெஞ்சுடரை கையிலேந்தி பவனி வருபவன் திருவண்ணாமலை நாதன்.

வைணவ பக்தர்களுக்குத் திருக்கோவில்களில் தினந்தோறும் குளிர்ந்த தீர்த்தத்தைப் பிரசாதமாகவும் துளசி தளத்தையும் கொடுத்து மகிழ்வார்கள் வைணவ பக்தர்கள்.

சைவ ஞானம் பெற்ற பக்தர்களுக்கு-அடியார்கள் திருக்கோவில்களில் அனுதினமும் உடலில் அணிந்து கொள்ள வெந்நீரையும் வில்வ தளத்தையும் தந்து மனமகிழ்ச்சிப் பெறுகிறார்கள்.

விரக்தி சன்யாசத்தை ஏற்கச் செய்து அதற்கு அதிபதியாக இராமானுஜரைத் தேர்ந்தெடுத்து உலக முழுவதும் வைணவத்தைப் பரப்பச்செய்தவர் மகாவிஷ்ணு.

ஆபத்து சன்யாசத்தை ஆதிசங்கரருக்குக் காட்டி-அகில முழுவதும் சைவத்தைப் பரப்பக் கட்டளையிட்டவர் பரமசிவன்.

திருவோண திருநட்சத்திரத்தில் உதயமாகி மகரராசிக்கு அதிபதியாகி மக்களை மகிழ்வித்தவர் மகாவிஷ்ணு.

திருவாதிரை திருநட்சத்திரத்தில் உருவாகி மிதுனராசிக்கு அதிபதியாகி ஆருத்ரா தரிசனத்தைக் கண்டு களிக்கச் செய்தவர் அகிலாண்டேஸ்வரன்.

அஷ்டாக்ஷர மந்திரத்தை ஜபிக்கச் செய்து ஆனந்தத்தை அள்ளித்தருபவன் ஆதிமூலன்.

பஞ்சாட்சர மந்திரத்தை மனதில் பதியவைத்து பக்திப் பரவசத்தில் ஈடுபடச் செய்தவன் மகேஸ்வரன்.

"மாலுக்கு அடிமை செய்" என்ற தத்துவம் வைணவ மதத்திற்கு ஆணிவேர்.

"அரனை மறவேல்" என்ற தத்துவம் சைவமதத்திற்கு ஜீவன்.

இவ்விரு தத்துவங்களும் மனித குலத்திற்கு ஒரே கருத்தைத்தான் வலியுறுத்துகின்றன. பக்தி அதனால் பரமானந்தம். எனவே ஒரே கருத்தை இவ்விரு தத்துவங்களினால் நாம் அறிய முடிகிறது. ★

23-ம் பககத் தொடர்ச்சி)

லரிது. ஆனுல் நம்மைப் போன்ற சாதாரண இல்லறத்தினரும் இறை நெறியில் ஈடுபடுவதற்கான எளிய வழிகளைத் தம் பாடல்களில் சொல்லி யுள்ளார் அவர்.

நம் உயிரைக் காலன் வந்து கவ்வும் காலத்தில் கடவுள் எண்ணம் நம்முள்ளத்தில் எழும் என்பது என்ன நிச்சயம்? அப்போதைக்கு இப்போதே-நல்ல உடல் வலிமையும், அறிவாற்றலும் உள்ளபோதே-அரங்கத்தரவணைப் பள்ளியானைப் பாடிப் பரவினுல் நம்மை அவன் எப்போதும் காத்தருள்வான் என்கின்ருர் பெரியாழ்வார்

நம் அந்திம காலத்தில் நம்முடைய சுற்றத்தார் நம்முடைய பொருள் மீதே கருத்து வைத்து நம்மை அப்பொருள் வைத்த இடம் குறித்துக் கேட்டு நச்சரிப்பர். அந்நிலையில் முகில்வண்ணனின் நினைப்பு எவ்விதம் முகிழ்க்கும்? அதுகாறும் பொறுத்திராமல் நாம் நல்லநிலையில் இருக்கும் போதே நம் நெஞ்சத்தை மாதவனுக்குக் கோயிலாக்கி, பக்தி ஆர்வம் என்பதோர் பூவிட்டு அர்ச்சித்தோமானுல் உய்வடையலாம். இந்த கருத்தமைந்த அற்புதமான பாடல் இதோ:

"சோர்வி னுல்பொருள் வைத்ததுண்
டாகில் சொல்லு சொல்லென்று
சுற்று மிருந்து
ஆர்வி னவிலும் வாய்திற வாதே
அந்த காலம் அடைவதன் முன்னம்
மார்வ மென்பதோர் கோயி லமைத்து
மாதவ னென்னும் தெய்வத்தை
நாட்டி
ஆர்வ மென்பதோர் பூவிட வல்லார்க்கு
அரவ தண்டத்தில் உய்யலு மாமே"

நாம் நல்லகதியடைவதற்கான மிக மிக எளிய வழியை இன்னெரு பாடலின் மூலம் கூறியுள்ளார் பெரியாழ்வார். நாம் வேறெதுவும் செய்ய வேண்டியதில்லை. நம் குழந்தைக்கு நாரணனின் திருநாமத்தைப் பெயராக வைத்தால் போதும். நாம் நம் குழந்தையை அழைக்கும் போதெல்லாம் நம்மையறியாமலே நாரணனை அழைத்தவர்களாகிருேம்.இறைவனின் அமுதினும் இனிய திருப்பெயரைத் தெரிந்தோ தெரியாமலோ அழைத்தார்க்குப் பரமபதமின்றிப் படுநரகம் வாய்ப்பதில்லை. எனவே, 'நாரணன் தம் அன்னை நரகம் புகாள்' என்பது பெரியாழ்வாரின் திடமான நம்பிக்கை.

அவருடைய பாடல்களில் பல சிறந்த தோத்திரப் பாடல்களாகவும் அமைந்துள்ளன. அவை நமக்கும், அரவணைப்பள்ளியானுககு மிடையே அன்புப் பாலம் அமைத்து அவன் பால் சேர்த்துவிட வல்லவை. சான்றுக்காக, இரண்டு பாடல்களைக் காணலாம்:

"வண்ண மால்வரை யேகுடை யாக
மாரி காத்தவ னே.மது சூதா!
கண்ண னே!கரி கோள்விடுத் தானே
கார ணு!களி றட்டபி ரானே!
எண்ணு வாரிட ரைக்களை வானே!
ஏத்த ரும் பெருங்கீர்த்தி யினனே!
நண்ணி நான்உன்னை நாள்தொறும்
ஏத்தும்
நன்மை யேஅருள் செய்எம்
பிரானே!"

"நம்ப னே!நவின் றேத்தவல் லார்கள்
நாத னே!நர சிங்கம தானுய்!
உம்பர் கோனுல கேழும் அளந்தாய்!
ஊழி யாயினுய்! ஆழிமுன் னேந்தி
கம்ப மாகரி கோள்விடுத் தானே!
கார ணு!கட லைக்கடைந் தானே!
எம்பி ரான்!என்னையாளுடைத்தேனே!
ஏழை யேனிட ரைக்களை யாயே."

பெரியாழ்வார திருமொழியான திவ்ய பிரபந்தப் பாடல்கள் நம் நெஞ்ச வயலில் பக்தி பயிர் வளர்ப்பவை. எம்பெருமானே வலிய வந்து ஆட்கொள்ளும் பெற்றியை விளைப்பவை; படிக்க எளியவை; பாட இனியவை; அருளில் திளைப்பவை; அகிலம் உய்விப்பவை. அத்தகு அருமைமிகு பாடல்களை நாமனைவரும் பாடிப்பரவி உய்வடைவோமாக.



## அறிதுயில் நாயகன்

அலைமக ளவளொடு அறிதுயி லதுகொளு
மமரவ ரிடரது களைவோனே,
அடுசெய லதுபுரி அசுரர்க ளவர்தலை
அரிதலை தொழிலென உடையோனே.

நிலைமறந் துனதருள் நினைவினை உடையவ
ரவர்மரு ளதையொழி நிறையோனே,
நினைவினி லிடமுறு நிறைமன மதையருள்
நினதருள் திருப்பெய ருரைப்பேனே.

வலக்கர மதுபெறு சுதர்சன சுடரொடும்
வலம்புரி யதனொடும் வருவாயே
வணங்கிடு மடியவர் வருதுயிர் பிணிபதன்
வழியறு எனதுயிர் மேலோனே.

பலகலை நிலமதில் பயிலுவ தெளிதென
பதமுட னுரைத்தருள் புரிவாயே
பகலவ னொளியொடு பரம்பொரு ளிஃதென
பரிவுட னுரைத்திடு பெருமாளே.

திரு. சுந்தர. கண்ணன்-மதுரை.

# கீதை காட்டும் நல்வழி

மோக்ஷ ஸன்யாஸ யோகம்

அத்தியாயம் — 18

பகுதி — 21

**புத்தியோகத்தால் விளையும் நலன் எது?**

மச்சித்த: ஸர்வதுர்க்காணி
மத்ப்ரஸாதாத் தரிஷ்யஸி |
அதசேத் த்வமஹங்காராந்ந
ச்ரோஷ்யஸி விநங்க்ஷ்யஸி ||
(18-58)

**'சித்தத்தை என்பால் வைத்து எனதருளால் இடையூறுகளையெல்லாம் தாண்டிச் செல்வாய். அல்லாமல் அஹங்காரத்தால் கேளாவிட்டால் கேட்டை அடைவாய்'.**

வாழ்க்கையில் மேலும் மேலும் இன்பத்தையும் சுகங்களையும் பெற நாம் அனைவரும் அன்று முதல் இன்று வரை ஓயாது முயன்று கொண்டிருக்கிறோம். இக்காலத்தில் அந்தந்த நாட்டில் இருக்கும் அரசாங்கங்கள் பல்வேறு புதிய திட்டங்கள் மூலம் தங்கள் குடி மக்களுக்கு மென்மேலும் வசதிகளைச் செய்து தருவதில் தீவிரமாக முனைந்திருக்கின்றன. நமது முன்னோர்களின் வாழ்வினைக் காட்டிலும், இன்றைய நம்மவரது அன்றாட வாழ்வினில் எத்தனை எத்தனை புற உலக வசதிகள், வாய்ப்புகள்-மிக்ஸி, கிரைண்டர், மின்சார அடுப்பு, ரெப்ரிஜிரேட்டர், டி.வி., டேப்ரிகார்டர் இன்னும் எத்தனை எத்தனையோ... சொல்லிக் கொண்டே போகலாம். அத்தனையையும் நாம் 'புற உலக வசதிகள்' என்ற ஒரே சொல்லில் அடக்கி விடலாம். ஆனால் இத்தனையையும் பெற்று விளங்கும் நாம், இத்தனை வசதிகளையும் எதற்காகப் பெற விழைந்தோமோ, அந்த பெறற்கரிய 'மன அமைதி'யைப் பெற்று விளங்குகின்றோமா? 'இல்லை' என்ற பதில் தானே வருகிறது. இவையெல்லாம் இல்லாத நமது முன்னோர்களின் வாழ்வினில் அமைதியும், ஆரோக்கியமும் அதிகம் இருந்ததாக அவர்களது வாழ்வே நமக்கு விளக்குகிறதே!

இதிலிருந்து நமக்கு என்ன புலனாகிறது?

புறத்தே உள்ள சுக போகங்களுக்கும், நாம் அனைவரும் பெற விரும்பும் நிரந்தரமான மன அமைதிக்கும் எந்த விதத் தொடர்பும் இல்லை என்பதுவேயாகும்.

புற உலக போகப் பொருள்களால் ஏதோ தற்காலிகமான மகிழ்ச்சி கிட்டுகிறது என்பது மறுக்க முடியாத உண்மைதான். ஆனால் அவ்விதம் நாம் பெறும் ஒவ்வொரு வித இன்பத்துடனும் துன்பமும் ஒட்டிக் கொண்டிருக்கிறது என்பதையும் நாம் மறுக்க முடியாது.

நிரந்தரமான விலை மதிப்பற்ற அமைதியும் ஆனந்தமும் எப்பொழுது நமக்குக் கிட்டும்?

பகவான் இந்த சுலோகத்தில் பதில் தருகிறார்.

நமது மனத்தைப் பரிபூரணமாக பகவான்பால் வைத்து வாழக் கற்றுக் கொண்டால் எத்தனை இடையூறுகள் எதிர்ப்படினும், அத்தனையும் அவனருளால் அகன்று ஒப்பற்ற ஆனந்தத்தை நாம் நிச்சயம் அடைவோம்.

மாறாக, எதைச் செய்தாலும், 'நான்' 'நான்' என்று இறுமாப்புடனும் அஹங்காரத்துடனும் நடந்து கொள்வோமேயானால், அமைதியற்ற அலங்கோல வாழ்வுதான் மிஞ்சும். இருப்பதையும் இழந்து சீரழிய நேரிடும்.

அஹங்காரம், ஆணவத்தால் அழிவுதான் மிஞ்சும் என்று நம்மனைவரையும் பகவான் ஈண்டு எச்சரிக்கிறார். அஹங்காரத்தால் விளையும் கேடு அடுத்த சுலோகத்தில் விளக்கப்படுகிறது.

யதஹங்கார மாச்ரித்ய
நயோத்ஸ்ய இதி மன்யஸே |
மித்யைஷ வ்யவஸாயஸ்தே
ப்ரக்ருதிஸ்த்வாம் நியோக்ஷ்யதி ||
(18-59)

**'அஹங்காரம் காரணமாகப் போர் புரிய மாட்டேன் என்று நீ துணிவாயேயாகில் உன் துணிவு வீணாகும். உனது இயல்பு உன்னைப் போரில் பிணித்து இழுத்துவிடும்'.**

பேராசிரியர் டி. கே. நாராயணன் M.Sc., M.Ph.
ஆசிரியர், 'சமயஜோதி' மதுரை.

சிறு குழந்தை ஒன்று தனியிடத்தில் தவழ்ந்து கொண்டிருக்கிறது. வீட்டில் அப்பொழுது எவருமில்லை. வாயிற் கதவு திறந்திருக்கிறது. திருடன் ஒருவன் அந்த சந்தர்ப்பத்தில் வீட்டினுள் நுழைந்து கைக்குக் கிடைத்த பொருள்களை எடுத்துச் சுருட்டிக் கொள்கிறான். குழந்தை தனது பொக்கை வாயைக் காட்டி அவனைப் பார்த்துச் சிரிக்கிறது. ஏன்? அதனிடம் 'அஹங்காரம்' இல்லை, வேற்றுமை உணர்வு இல்லை. அதை 'அறியாத நிலை' என்பர் சிலர். வேறு சிலர் அனைத்தையும் இறை சொரூபமாகக் காண்கின்ற 'அறிந்த நிலை' என்பர்.

# நிலையான ஆனந்தம்

விதி, நம் தேவைகளை நாம் விரும்புவதற்கு மாறாக அதன் விருப்பப்படி அளிக்கிறது. உள்ளத்தை அடக்குவது கடினம். அது ஓடித் திரியும் இயல்புள்ளது. ஆனால், அதை அடக்கி ஆள்பவனே நிலையான ஆனந்தம் உடையவன்.

— புத்தர்.

# பகைவனும் நண்பன்

விஷத்தை விஷம் என்று நினைக்காமல் எந்நேரமும் அமுது என்று நினைத்தால் அது அமுதமாகவே மாறிவிடும். அதுபோலவே பகையைப் பகை என்று கருதாமல் நட்புறவு பாராட்டி வந்தால் பகைவனும் நண்பனாகி விடுவான்.

— யோகவாஸிஷ்டம்.

கொலை, கொள்ளை, சூது எதையும் குழந்தை ஏன் எதிர்க்கவில்லை என்று பெரும் கேள்வி கேட்க முடியாது. அதன் பார்வையில் நல்லது, தீயது என்ற வேறுபாடு எதுவும் கிடையாது. குழந்தையைப் பொறுத்தமட்டில் பாம்பு, புலி, திருடன் எல்லாம் ஒன்று தான். அது அனைத்தையும் பார்த்துப் புன்னகைக்கும். அவற்றைப் பிடிக்கக் கையை நீட்டும்.

ஆனால் நம்மவரது நிலைமை வேறு. நமது பிரதிநிதியான அர்ஜுனன் பெற்ற பயிற்சியும் பண்பும் க்ஷத்திரிய சுபாவத்திற்கு முற்றிலும் ஒத்தது ஆகும். தீமையை எதிர்த்துப் போராடுவதுதான் அவனது கடமையும் அவனது சுபாவத்திற்கேற்ற செயலுமாகும். வாழ்நாள் முழுவதும் அவன் செய்து வந்த செயலும் அது தான். இப்பொழுது திடீரென்று 'நான் போர் புரியமாட்டேன்' என்று அவன் சொல்லுவது, விவேகத்திலிருந்து பிறந்த வார்த்தைகளல்ல; உற்றார் உறவினர்மீது அவன் கொண்டுள்ள பாசத்திலிருந்து எழுந்ததாகும். பாசம் மோசத்திற்கு வழி கோலுகிறது. அர்ஜுனனிடம் எழுந்த அஹங்காரமே அவனைத் தாறுமாறாகப் பேசவும் செயல்படவும் வைக்கிறது. அஹங்காரம் ஆத்ம சக்தியைக் கெடுக்கும். ஒருவனது சுபாவம் தலைகீழாக மாறிவிட்டால் அதைவிட அவனுக்குக் கேடு பயப்பது வேறு எதுவுமில்லை.

அர்ஜுனனது உள்ளத்தில் உணர்ச்சிகள் பொங்குகின்றன. அதர்மத்தை எப்படியும் வென்றாக வேண்டும் என்று அவனது நாடி நரம்புகள் துடிக்கின்றன. ஆனால் உற்றார் மீதுள்ள பாசம் அவனை அப்படிச் செய்ய விடாது தடுக்கிறது. உள்ளொன்று வைத்து புறம் ஒன்று பேசு பவனாக அவன் ஆகிவிடுகிறான். தற்காலிகமாக அவன் அஹிம்சையைப் பற்றிப் பேசினாலும் அவனது இயல்பான தன்மை அதாவது ஸ்வபாவம் அவனை படிப்படியாகப் போரில் திணித்து விடும்.

இது நமக்கும் பொருந்தும். நமது ஸ்வபாவத்தை நாம் நன்கு அறிந்திருக்க வேண்டும். அதற்கேற்ப செயல்பட வேண்டும். அப்பொழுது செயல்களில் வெற்றியும் மனத்தினில் அமைதியும் உண்டாகும். மாறாக, அஹங்காரம் போன்ற தீய குணங்கள் காரணமாக நமது ஸ்வபாவத்திற்கு முரணான செயல்களில் ஈடுபட்டால் தோல்வி, மனக்குழப்பம் போன்றவைதான் மிஞ்சும்.

இதனது தொடர்ச்சியாக அடுத்த சுலோகமும் காணப்படுகிறது.

**ஸ்வபாவஜேன கௌந்தேய**
**நிபத்த: ஸ்வேன கர்மணா |**
**கர்தும் நேச்சஸி யன்மோஹாத்**
**கரிஷ்யஸ்யவசோபி தத் || (18-60)**

'குந்தியின் புத்திரனே! நீ மயக்கத்தால் எதைச் செய்ய மறுக்கிறாயோ, உன் இயல்பில் பிறந்த வினையினால் கட்டுண்டு உன் வசமிழந்தவனாக அதையே நீ செய்வாய்'.

டாக்டர், வக்கீல் போல வேஷம் போட்டால் அவர் வக்கீலாகி விட முடியுமா? ஆண்டி அரசனாக வேஷம் போட்டால் உண்மையில் அவன் அரசனாகி விட முடியுமா? அதுபோல பாமரன் ஒருவன் தன்னைப் பண்டிதனாகக் கனவு கண்டுவிட்டால் அவன் பண்டிதனாகி விட முடியுமா? கனவு வேறு, நனவுவேறு. மயக்க நிலைவேறு. சாதாரணநல்ல நிலை வேறு.

(தொடரும்)

# ஸ்ரீ வேங்கடேச ஸுப்ரபாதம்

श्रीपद्मनाभ पुरुषोत्तम वासुदेव
वैकुण्ठ माधव जनार्दन चक्रपाणे।
श्रीवत्सचिह्न शरणागतपारिजात
श्रीवेङ्कटाचलपते तव सुप्रभातम्॥

ஸ்ரீ பத்மநாப புருஷோத்தம வாஸுதேவ
வைகுண்ட மாதவ ஜநார்தந சக்ரபாணே |
ஸ்ரீ வத்ஸசிஹ்ந சரணகதபாரிஜாத
ஸ்ரீ வேங்கடாசலபதே தவஸுப்ரபாதம் ||

பதவுரை :— ஸ்ரீ பத்மநாப = திருநாபியில் தாமரை மலரை உடையவனே! புருஷோத்தம = ஆண்களில் சிறந்தவனே! வாஸுதேவ = வாஸுதேவனே! வைகுண்ட = வைகுண்டனே! மாதவ = மாதவனே! ஜநார்தந = ஜனார்தனனே! சக்ர பாணே = சக்ரபாணியே! ஸ்ரீ வத்ஸ சிஹ்ந = (திரு மார்பில்) வத்ஸம் என்னும் மறுவை உடையவனே! சரண ஆகத பாரிஜாத = சரணம் அடைந்தவர்க்குப் பாரிஜாத மரம் போன்றவனே; ஸ்ரீ வேங்கடா சலபதே = திருமலைநாதனே; தவ ஸுப்ரபாதம் = உனக்கு நற்பொழுது புலருக.

கருத்துரை :— சரண் அடைந்தவர்களைக் கைவிடாதவனாகிய நீ, உன்னுடைய பல்வகைத் திரு நாமங்களைப் பிதற்றிக்கொண்டு உன் வாயிற் கடையில் நின்று உன் அருள் ஒன்றையே எதிர்நோக்கி நிற்கும் எங்களை அருளுவதற்காகத் துயிலெழுவாயாக.

குறிப்பு :— வாஸுதேவன் எல்லா வஸ்துக்களிலும் வஸிப்பவன். ஆயினும் குற்றமற்று விளங்குபவன். பாரிஜாதம் தேவலோகத்திலுள்ள ஐந்து தருக்களில் ஒன்று. மாதவன் - திருமகள் நாதன். ஜந அர்தநன் - ஜனங்களின் பிறப்பை நீக்குபவன். சக்ர பாணி — திருவாழியைக் கையில் தரிப்பவன். வைகுண்டன் - அழிவற்றவன்.........

कन्दर्पदर्पहरसुन्दरदिव्यमूर्ते
कान्ताकुचाम्बुरुहकुड्मललोलदृष्टे।
कल्याणनिर्मलगुणाकरदिव्यकीर्ते
श्रीवेङ्कटाचलपते तव सुप्रभातम्॥

கந்தர்ப்ப தர்ப்பஹரஸுந்தர திவ்ய மூர்த்தே
காந்தா குசாம்புருஹ குட்மல லோல த்ருஷ்டே |
கல்யாண நிர்மல குணாகர திவ்யகீர்த்தே
ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் ||

பதவுரை :—கந்தர்ப்ப=மன்மதனுடைய; தர்ப்ப= கொழுப்பை; ஹர=போக்கடிக்கின்ற; ஸுந்தர= அழகிய; திவ்ய=சிறந்த; மூர்த்தே=திருவாகாரத்தையுடையவனே! காந்தா=ப்ரியநாயகியாகிய திருமகளுடைய; குச அம்புருஹ குட்மல=திருமுலைத் தடங்களாகிற தாமரை மொக்குகளில்; லோல=மிக்க விருப்பமுள்ள; த்ருஷ்டே=கண்களை உடையவனே; கல்யாண நிர்மல குண ஆகர=மங்களகரமானவைகளும் குற்றமற்றவைகளுமான குணங்களுக்கு உறைவிடமே! திவ்ய கீர்த்தே=சிறந்த நற்புகழை உடையவனே! ஸ்ரீ வேங்கடாசலபதே=திருமலை நாதனே; தவ ஸுப்ரபாதம்=உனக்கு நற்பொழுது புலருக.

கருத்துரை :—உன் திருமேனியின் அழகில் ஈடுபட்ட திருமகளும் உன்னைத் துயிலெழ வொட்டாள். அவள் திருமுலைத் தடங்களின் அனுபவத்தில் ஈடுபட்ட நீயும் துயிலெழாய். அவ்வாறின்றி அருள் முதலிய உன் குணங்களின் மேன்மையைப் பொய்யாக்காது துயிலெழுந்து அடியார்களுக்கு அருள்வாயாக.

मीनाकृते कमठ कोल नृसिंह वर्णिन्
स्वामिन् परश्वथतपोधन रामचन्द्र।
शेषांशराम यदुनन्दन कल्किरूप
श्रीवेङ्कटाचलपते तव सुप्रभातम्॥

மீநாக்ருதே கமட கோல ந்ருஸிஹ்ம வர்ணிந்
ஸ்வாமிந் பரச்வததபோதந ராமசந்த்ர |
சேஷாம்சராம யதுநந்தந கல்கிரூப
ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் ||

பதவுரை :—மீந ஆக்ருதே=மீன் உருவாயவனே! கமட=ஆமையானவனே; கோல=பன்றியானவனே! ந்ருஸிஹ்ம=நரசிங்கனே! வர்ணிந்=ப்ரஹ்மசாரியே! (வாமனனே) பரச்வத தபோதந=கோடாலி முனியே! (பரசுராமனே) ராமசந்த்ர=ஸ்ரீராமனே! சேஷ அம்ச ராம=ஆதிசேஷன் அம்சமாகிய பலராமனே' யது நந்தந=யதுகுலத்தவரைக் களிக்கச் செய்தவனே! (ஸ்ரீ க்ருஷ்ணனே) கல்கி ரூப=கல்கியாய் அவதரிக்கப் போகுமவனே! ஸ்ரீ வேங்கடாசலபதே = திருமலை நாதனே! ஸ்வாமிந்=தலைவனே! தவ ஸுப்ரபாதம்= உனக்கு நற்பொழுது புலருக.

கருத்துரை :—நீ உலகுக்கெல்லாம் ஒரு தலைவன் ஆனமையின் உன் இடம் விட்டிறங்கி தசாவதாரங்கள் எடுத்து உலகைத் தீங்கினின்றும் காப்பாற்றி நல்வழிப் படுத்தியது முற்றிலும் தகுந்த செய்கை. உடைமையை உடையவன் காப்பாற்றுவது பொறுப்பு. அத்தகைய நீ உன் கோயில் தேடி வந்து காத்திருக்கும் அடியார்களைக் காப்பாற்ற வேண்டும். துயிலெழுக.

குறிப்பு :—கல்கி அவதாரம் இனிமேல் கலியுக முடிவில் ஏற்பட வேண்டும்.

एलालवङ्गघनसारसुगन्धितीर्थं
दिव्यं वियत्सरिति हेमघटेषु पूर्णम् ।
धृत्वाऽद्य वैदिकशिखामणयः प्रहृष्टाः
तिष्ठन्ति वेङ्कटपते तव सुप्रभातम् ॥

ஏலா லவங்க கநஸார ஸுகந்தி தீர்த்தம்
திவ்யம் வியத்ஸரிதி ஹேமகடேஷு பூர்ணம் |
த்ருத்வாத்ய வைதிக சிகாமணய: ப்ரஹ்ருஷ்டா:
திஷ்டந்தி வேங்கடபதே தவ ஸுப்ரபாதம் ||

பதவுரை :—வியத் ஸரிதி=ஆகாச கங்கையில்; ஹேம கடேஷு=தங்கக் குடங்களில்; பூர்ணம்= நிரப்பப் பெற்றதும்; ஏலா=ஏலக்காய்; லவங்க= லவங்கம்; கநஸார=பச்சைக் கற்பூரம் இவைகளின்; ஸுகந்தி=நல்ல மணம் கலந்ததும்; திவ்யம்=உயர்ந்ததுமான; தீர்த்தம்=தீர்த்தத்தை(தண்ணீர் நிறைந்த தங்கக்குடங்களை); த்ருத்வா=(தலைகளில்) சுமந்து கொண்டு; அத்ய=இப்பொழுது; வைதிக சிகாமணய:=வைதிக ச்ரேஷ்டர்கள்; ப்ரஹ்ருஷ்டா:= ஸந்தோஷ முள்ளவர்களாய்; திஷ்டந்தி=(உன் திருக்கோயில் வாயிலில்) நிற்கின்றனர். வேங்கடபதே= திருமலை நாதனே! தவ ஸுப்ரபாதம்=உனக்கு நற்பொழுது புலருக.

கருத்துரை :—வேதமுறை தவறுதொழுகும் ஸ்ரீ வைஷ்ணவ ப்ராஹ்மணர்கள் தங்கக்குடங்களில் ஆகாச கங்கையில் தீர்த்தத்தை நிரப்பி நல்ல மணமூட்டித் தலைகளில் எடுத்துக்கொண்டு உன் ஸந்நிதி வாயிலையடைந்து உவகையுடன் காத்து நிற்கின்றனர். துயிலெழுக.

குறிப்பு :—வைதிக சிகாமணய: – திருமலையில் இன்றும் முதல் தீர்த்தம் பெற்றுவருகின்றனர். திருமலை நம்பிகள் வம்சத்தவர்களாகிய தோழப்பர்கள். இன்றும் இவர்கள் ஆகாசகங்காதீர்த்த கைங்கர்யம் நடத்தி வருகிறார்கள்.

भास्वानुदेति विकचानि सरोरुहाणि
संपूरयन्ति निनदैः कुकुभो विहङ्गाः ।
श्रीवैष्णवास्सततमर्थितमङ्गलास्ते
धामाश्रयन्ति तव वेङ्कट सुप्रभातम् ॥

பாஸ்வாநுதேதி விகசாநி ஸரோருஹாணி
ஸம்பூரயந்தி நிநதை: ககுபோ விஹங்கா: |
ஸ்ரீ வைஷ்ணவா: ஸததமர்த்தித மங்களாஸ்தே
தாமாச்ரயந்தி தவ வேங்கட ஸுப்ரபாதம் ||

பதவுரை :—பாஸ்வாந் = சூரியன்; உதேதி = உதித்துக் கொண்டிருக்கிறான்; ஸரோருஹாணி= தாமரை மலர்கள்; விகசாநி (ஸந்தி)=மலர்கின்றன; விஹங்கா:=பறவைகள்; நிநதை:=(தங்கள்) நாதங்களால்; ககுப:=(எண்) திக்குகளையும்; ஸம்பூரயந்தி= நிறைக்கின்றன; ஸ்ரீ வைஷ்ணவா:=ஸ்ரீ வைஷ்ணவர்கள்; ஸததம்=எப்பொழுதும்; அர்த்தித மங்களா:= (உனக்கு) மங்களங்களை வேண்டிக் கொண்டு; தே= உன்னுடைய; தாம=திருக்கோயிலை; ஆச்ரயந்தி= உனக்கு நற்பொழுது புலருக.

கருத்துரை :—பொழுது புலர்ந்துவிட்டது. நீ துயிலெழப் போகிறாய் என்று களிப்பன போல் பகுத்தறிவற்ற பறவைகளும் எழுந்து சிலம்புகின்றன. அறிவுணர்ச்சியற்ற தாமரை மலர்களும் மலர்கின்றன. அடியார்கள் மங்களாசாஸனம் செய்து கொண்டு வந்து நிற்கின்றனர். அடியவர்க் கெளியவனான நீ இன்னும் உறங்குவது அழகன்று. துயிலெழுந்தருளுக.

ब्रह्मादयस्सुरवरास्समहर्षयस्ते
सन्तस्सनन्दनमुखास्तव योगिवर्याः ।
धामान्तिके तव हि मङ्गलवस्तुहस्ताः
श्रीवेङ्कटाचलपते तव सुप्रभातम् ॥

ப்ரஹ்மாதயஸ்ஸுரவராஸ் ஸமஹர்ஷயஸ்தே
ஸந்தஸ் ஸநந்தந முகாஸ்தவ யோகிவர்யா: |
தாமாந்திகே தவஹி மங்கள வஸ்து ஹஸ்தா:
ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் ||

பதவுரை:—தே:=அப்படிப்பட்ட(மிகவும் உயர்ந்தவர்களாகிய); ஸமஹர்ஷய: = மஹர்ஷிகளுடன் கூடிய; ப்ரஹ்மாதய:=நான்முகன் முதலிய; ஸுரவரா:=தேவச்ரேஷ்டர்களும்; ஸந்த:=ஸாதுக்(பக்தர்)களாகிய; ஸநந்தந முகா:=ஸநந்தனர் முதலிய; யோகிவர்யா:=யோகி ச்ரேஷ்டர்களும்; மங்கள வஸ்து ஹஸ்தா:=(கண்ணாடி முதலிய) சோபனப் பொருள்களைக் கையில் ஏந்திக்கொண்டவர்களாய்; தவ=உன்னுடைய; தாம அந்திகே=கோயிலின் அருகில்; ஸந்தி=இருக்கின்றனர்; ஸ்ரீ வேங்கடாசலபதே= திருமலைநாதனே; தவ ஸுப்ரபாதம்=உனக்கு நற்பொழுது புலருக.

கருத்துரை :—நீ துயிலெழுந்ததும் உன் திருக்கண்மலர் திறந்து முதலில் பார்க்கத்தக்கக் கண்ணாடி முதலிய மங்களப் பொருள்களைக் கைகளில் ஏந்திக் கொண்டு நான்முகன் முதலியோர், கோயில் அருகில் (மறைவாக) நிற்கின்றனர். துயிலெழுந்தருளுக.

(தொடரும்)

# செல்வோம் சோமநாதபுரம்

சுற்றுலாப்பயணிகளின் கனவுலக மாகவும்,புனிதப்பயணிகளின் தெய்வ மணம் கமழும் தலங்கள் உள்ள இட மாகவும் திகழ்வது கர்நாடக மாநிலம். பிற மாநிலங்களைப் போலவே மொழி, வரலாறு, பண் பாடு, கலாச்சாரம் இவற்றில் தனித் தன்மை கொண்டது.

கர்நாடகம் பல்வேறு காலக்கட்டங் களில் மௌரியர், சாதவாகனர், கடம்பர், கங்கர். சாளுக்கியர், ஒய் சாளர், இராட்டிரகூடர்கள், விஜய நகர நாயக்கர், மராட்டியர், முகம் மதியர், ஆங்கிலேயர் எனப் பலதரப் பட்ட வமிசாவழியினரின் ஆளு கைக்கு உட்பட்டிருந்தது.

பல்வேறு கட்டடக்கலை சிற்பக் கலைப்பாணி கர்நாடகத்தில் நிலவிய போதும், ஒய்சாளர் காலமாகிய கி.பி. 11 முதல் 13-ஆம் நூற்றுண்டுகளில் மிகப்பெரும் முன்னேற்றம் ஏற் பட்டது. கரும்பச்சை நிறக் கற் களில் நுட்பமான வேலைப்பாடமைந்த புதிய கலைப்பாணியை அறிமுகப் படுத்தினுர்கள் ஒய்சாள மன்னர்கள். நட்சத்திர வடிவமுள்ள உயர்ந்த மேடையின்மீது கோயில்கள் கட்டப் பட்டன. உயர்ந்த வேலைப்பாடு அமைந்த வாயில்கள், கடைசல் பிடித் தது போன்ற பல்வகையான அழகிய தூண்கள், சுற்றுச் சுவர்களில் பேசும் சிற்பங்கள், நுட்பமான சிற்ப வேலைப் பாடமைந்த விதானங்கள் ஆகியன ஒய்சாளர் கலையைப் பறைசாற்றிக் கொண்டு நிற்கின்றன. பேலூர், அள பீடு, சோமநாதபுரம் ஆகிய இடங் களிலுள்ள கலைச்செல்வங்கள் ஒய் சாளர் கலைக்குக் சான்று கூறிக்கொண் டிருக்கின்றன.

சோமநாதபுரம் சிற்றூர் மைசூர் நகரத்தின் வடகிழக்கே ஓடும் காவிரி யின் இடது கரையில் அமைந்துள்ளது. சோமநாதபுரம் பிரசன்ன சென்ன கேசவர் கோயிலால் பெயர் பெற்ற இடம்.



சோமநாதபுரம் கோயிலும், திருச்சுற்றும்

கோயிலுக்குமுன்புறம் செயற்கைப் புல் தரை உண்டு. பல திரைப்படங் களில் பார்த்தும்,புத்தகங்களில் படித் தும் அறிமுகமாகியிருக்கும் சோம நாதபுரம் கோயிலின் முன் வாசலில் நுழையும்போதே ஒரு சிற்பக்கலைக் கருவூலத்திற்குள் நுழையும் எண்ணம் நமது மனதில் ஏற்படுகிறது.

கோயிலின் முன் வாசலைக் கடந்த தும் இடது பக்கம் ஒரு சாசனக்கல் காணப்படுகிறது. ஒய்சாள மன்னன் மூன்றும் நரசிம்மனின் உயர்மட்ட அலுவலராக இருந்த சோமா அல்லது சோமநாதன் என்பானின் நினைவாக

**திரு. சேலம் அன்பரசு**

சோமநாதபுரத்தைஓர் அக்ரகாரமாக நரசிம்மன் ஏற்படுத்தி அங்கு கேசவர் ஆலயமும் கட்டுவித்தான். இக் கோயில் திருப்பணி கி.பி. 1268-இல் தொடங்கப்பட்டு கி.பி. 1269-இல் முற்றுப்பெற்றதாகக் கோயிலின் முன்பு காணப்படும் ஒரு கல்வெட்டு கூறுகிறது.

மூன்றும் நரசிம்மனின் அரசகுடும் பத்தைச் சேர்ந்தவரும், உயர்மட்ட அலுவலராகவும் விளங்கிய சோம நாதன் அக்கோயிலைச் சுற்றி ஒரு நகரையும் உருவாக்கினுன்.

பழங்கால வரலாற்று நினைவுகளில் இருந்து மீண்டும் வருகிறோம். கோயில் அமைந்துள்ள மேடைக்கும் சுற்று மதிலையொட்டியுள்ள தூண்கள் தாங் கும் மண்டபத்திற்கும் இடையில் பள்ளமான திருச்சுற்றுக் காணப்படு கிறது. (இதைப் பாதாள அங்கணம் என்று மேல் கோட்டையில் குறிப் பிடுகிறுர்கள்). இரவு நேரங்களில் கோயில் வெளிச்சுவரில் உள்ள சிற்ப வேலைப்பாடுகளைக் காண வசதியாகக்



கோயில் திருச்சுற்றில் நடன விநாயகர் மற்றும் இசை மீட்டும் பெண்டிர்.

கோயில் மதிலை ஒட்டி நிலமட்டத்தில் ஃபோகஸ் மின் விளக்குகள் அமைக்கப்பட்டுள்ளன.

முன் கோபுரமும், அதில் இடம் பெற்றுள்ளசிற்பங்களும் வெகுவாகப் பாதிக்கப்பட்டுள்ளன. கோயில்களில் ஒரு மூலஸ்தானம் மட்டுமே இருப்பது வழக்கம். ஆனால் இங்கு ஒரே கோயிலுக்குள் மூன்று மூலஸ்தானங்கள் காணப்படுகின்றன. மூலஸ்தானங்கள் மூன்றின் மேலும் கூம்பு வடிவ விமானங்கள் (Pyramidal towers) சிறந்த சிற்ப வேலைப்பாடுகளுடன் காணப்படுகின்றன.

கோயிலின் வாயிலில் இரு வாயில் காப்போர் உருவங்கள் சிறந்த சிற்ப வேலைப்பாடு கொண்டவை.

மைய மூலஸ்தானத்தில் பிரசன்ன சென்னகேசவர் உருவமும், தெற்கு மூலஸ்தானத்தில் கோபாலர் உருவமும், வடக்கு மூலஸ்தானத்தில் ஜனார்தனரின் உருவமும் காணப்படுகின்றன.இத்திருவுருவங்கள் சிறந்த சிற்ப வேலைப்பாட்டிற்குச் சான்றாக விளங்குகின்றன. மிகையான அணிகலன்களுடன் உள்ளபடி சிற்பவடிவங்களைச் செதுக்கும் பாணி ஓய்சாளர் பாணி.

பேலூர், அளபீடு ஆகிய இடங்களில் காணப்படும் சிற்பங்களைவிட மிகச் சிறந்தவை சோமநாதபுரச் சிற்பங்கள் என்று குறிப்பிட்டுள்ளார் ஃபெர்குஷன் (Ferguson) என்பவர்.

பிற சமய மன்னர்களின் படையெடுப்பிற்கு அஞ்சி இக்கோயில் மூலவர் சிற்பங்களை அக்கால மக்கள் மறைத்து வைத்தார்கள். இம்மூன்று மூலத்தானங்களுக்கு முன்பு காணப்படும் நான்கு தூண்களுக்கு இடைப்பட்ட பகுதியில்தான் தேவதாசிகள் அக்காலத்தில் தமது நடனக் கலையை இறைவனுக்கு ஆடிக்காட்டி வழிபடுவார்களாம்.இது வழிகாட்டி கூறுவது.

மூன்று மூலஸ்தானங்களுக்கும் சேர்ந்து ஒரு வாயில்.கோயில் சுவரில் சில கல் சாளரங்கள் இருந்தபோதிலும் கோயிலுக்குள் ஒளி உள்ளே புக வழியின்றி ஒரே இருட்டாகக் காணப்படுகிறது. சுற்றுலாப்பயணிகளின் வசதிக்காகத் தொல்பொருள் ஆய்வுத்துறையினர் நீண்ட மின்சார ஒயருடன் கூடிய ஃபோகஸ் மின் விளக்கு ஏற்பாடு செய்து வைத்துள்ளார்கள். இதன் உதவியால்தான் கேசவர், கோபாலர், ஜனார்தனர் சிற்பங்களின் நுட்பமான வேலைப்பாடுகளைக் காணமுடியும். இங்கு வழிபாடு கிடையாது.

கோயிலைச் சுற்றியுள்ள ஜகதியின் (Parapet) போதிகைகளில் யானைகள், குதிரை வீரர்கள், புராணக் காட்சிச் சிற்பங்கள் காணப்படுகின்றன. இந்தப் போதிகைக்கு மேல் பகுதியில் பெரிய அளவிலான சிற்பங்கள் காணப்படுகின்றன. இச்சிற்பங்கள் மொத்தம் 194. இவற்றில் 144 சிற்பங்கள் பெண்வடிவச் சிற்பங்கள். எஞ்சியவை ஆண்வடிவச் சிற்பங்கள். இவை ஒவ்வொன்றும் சிறிதளவாவது பின்னமாக்கப்பட்டுள்ளன. இக்கோயிலில் காணப்படும் சிதைவுகள் முழுவதற்கும் பிற சமயத்தவரை மட்டும் குற்றம் சொல்லிவிட முடியாது. சிற்பங்களை போற்றிக் காக்காத 'நற்குணம்' நம்மிடையில் இன்றும்கூடக் காணப்படுகிறது.

கோயிலை ஒட்டியுள்ள மேடையில் நடந்து கொண்டே கோயில் சுவரிலுள்ளசிற்பங்களைப் பார்த்த வண்ணம் வலம் வருகிறோம். திருமாலின் பல தரப்பட்ட வடிவங்களாகிய நரசிம்மர், வராக அவதாரம், குழலூதும் கண்ணன், பிரம்மா, சிவன், கணபதி, சூரியன், மன்மதன், இலட்சுமி முதலிய சிற்பவடிவங்களும் நமது கண்களையும் கருத்தையும் கவருகின்றன.

கர்நாடகத்தில் ஓய்சாளர் காலத்தில் இந்து சமயம் சார்ந்த சிற்ப கட்டடக் கலை உச்சநிலையடையக் காரணமாக இருந்தவர் ஜககண்ண ஆச்சாரி என்பவர். இவரது பெருமையை நிலைநாட்டுவதாக அமைந்துள்ளது சோமநாதபுரம் கோயில்.

கோயிலின் வெளியே சில சிற்பவடிவங்கள் காணப்படுகின்றன. சோமநாதபுரம் மைசூரில் இருந்து 40 கி. மீ. தொலைவில் உள்ளது. இத்தகு சிறப்புமிகு, எழில்மிகு சோமநாதபுரத்திற்கு சென்று வருவோம் வாரீர்!



# திருவடி

திருவடி, இணையடி, சரணம், பாத பங்கஜம், திருவருள், உண்மை, ஞானம் என்பன எல்லாம் ஒன்றையே குறிக்கும் என்பர் சான்றோர். மற்றும் அன்பின்; ஆனந்தத்தின்; கருணையின்; பேரின்பத்தின்; 'சிவாய நம' எனும் ஐந்தெழுத்தின் நிலைக்களம் என்றும் அதனைக் குறிப்பர். இவையனைத்துமே அவரவர்களது ஆன்ம பக்குவத்திற்கொப்ப, அனுபவ உணர்வைக் கொண்டு உணரும் உணர்ச்சியின் அடிப்படையில் கூறப்படுவதால், 'இதுதான் சரி' என்று யாருமே அறுதியிட்டுக் கூற இயலாது. அவரவர்களுக்கு, அவையவை, உணரும் அந்த நேரத்தில் 'உண்மை'யாகவே அமையும். இப்படிக் குறிக்கப்படும் இறைவனோ, அல்லது அவனது அம்சமாகவோ கருதப்படும் எதுவோ, 'இதுதான்' என்று முடிவாகக் கூறப்பட இயலாதது. ஏனெனில், இறைவன் கருவி கரணங்களுக்கு (கண், மூக்கு, வாய், காது, மெய் மற்றும் மனம், புத்தி, சித்தம், அகங்காரம்) அப்பாற்பட்டவன். அவனை உணர்வினால் மட்டுமே உணர முடியும்.

அப்படியானால் இறைவனது நாம இலக்ஷணங்களுக்குப் பொருள் என்ன? உணர்வினால் மட்டும் உணரப்படும் ஒன்றைப் பற்றிச் சொற்களால் குறிக்க வேண்டின், உருவகத்தில் கற்பனை செய்துதான் கூற முடியும். அப்படித்தான் இறைவனது இலக்ஷணத்தைக் குறிக்கும் சொற்கள் அனைத்தும் ஆகும். அவை எவையுமே தாம் குறிக்க வந்ததை முழுமையாகக் குறிக்க முடியாதன.

மனிதன் எந்த ஒன்றைக் குறிக்கும் போதும் தன்னுடைய மானுட நிலையுடன் Anthropocentric State, ஒப்பிட்டு அதன் வழி விளக்க முயல்வது வழக்கம். அதன்படி இலக்ஷணங்கள் கூற முடியாத இறைவனைக் குறிக்கும்போது, மனிதனுக உருவகப்படுத்திச் சொல்வது இயல்பு. எனவே இறைவனை மனித உருவில் பாவித்து, அவனது முழு உருவம், அன்பின் சொரூபம், கருணையின் வடிவம் என்றெல்லாம் அழைப்பர். அதுபோலவே, உருவகப்படுத்திய அவனது திருப் பாதங்களை அன்பு, கருணை, ஞானம், ஆனந்தம் என்றும் கூறுவர். ஏனென்று பார்ப்போமா?

மனிதன் நிலைத்து நிற்பதற்கும் (Static), அன்றி, இடம் பெயர்ந்து செல்வதற்கு (dynamic) அவனது பாதங்கள் பயன்படுகின்றன. இறைவனை சிவ-சக்தியாக (Static and dynamic aspects of God) கொள்வது சைவ சித்தாந்த மரபு. எனவே இறைவனது திருப்பாதங்களை அவனது நிலை—செயல் சக்திகளாக பாவித்துக் கூறுவர்.

ஒரு மனிதனுக்கு அவனது பாதங்களே தாழ்ந்த (கீழ் நிலையில் அல்லது குறைவான மதிப்பில்) நிலையிலுள்ளன. அவ்வாறே இறைவனின் (நம் கற்பனையில்) மிகத் தாழ்ந்த அம்சங்களாகக் கருதப்பெறும் பாதங்களே நம்பால் அன்பாகவும், கருணை முதலியனவாகவும் கருதுவது சிலரின் வழக்கம். வேறு சிலர் இறைவன் முழுமையுமே அன்பு முதலிய பண்புகளாகக் கொண்டு அதில் மிகச் சிறிதளவான, மிகத் தாழ்ந்த அளவான செயல்பாட்டு நிலை (தம் கற்பனையில்) அவனது திருப்பாதங்களிலிருந்து நமக்கு வெளிப்படுகின்றன என்பர்.

இனி, இத்திருப்பாதங்களை நினைத்தல், வழிபடல், வணங்கல், போற்றுதல், அஞ்சலி செய்தல், வாழ்த்துதல் எல்லாமே பொதுவாக நம்முடைய மனத்தை, சித்தத்தை, உணர்வை அந்த திருப் பாதங்களில் (அல்லது அவை வழி இறைவனில்) நிலைபெறுமாறு நிறுத்துவதற்கான உபாயம் ஆகும். 'யத் பாவம் தத்பவதி' (நீ எதை நினைக்கிருயோ அல்லது பாவிக்கிருயோ நீ அது ஆகின்ருய்) என்பதற்கு இணங்க இறைவனது பாதங்களை (அல்லது பாதங்களின் வழி இறைவனையே) நினைக்க, சிந்திக்க உணர முற்படும் போது நீ இறைவனேயாகிவிடுகிருய். (முறையே த்வைதம், சித்தாந்தம் முதலியனபடி) என்பதாகும். அல்லது அந்தத் திருவடிகளின் பண்புகளாள அன்பு, உண்மை, ஞானம் முதலியனவெல்லாம் உன்னில் படிந்து, நாளடைவில் நீ அவைகளின் அம்சமாகவே, சொரூபமாகவே ஆகிவிடுகிருய் என்பது கருத்து. அருட்

Dr. S. R. ஜெயவேலு, D.Litt.
சென்னை—79.

## சந்தாதாரர்களுக்கு....

31-7-88—ஆம் தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர் களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித் துக்கொள்ளும்போது, தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக் குறிப் பிடவும். ஆங்கிலத்தில் கடிதத் தொடர்பு கொள்ளவும்.

78 120 206 207 208 210 211 333 338 341 342 345A 346 348 349 350 352 353 362 541 முதல் 546 743 முதல்746 751 1597 1663 1704 1705 1706 1716 1720 1722 1723 1730 1741 1744 1748 1750 1755 1759 1764 1769 1770 1772 1774 1779 1781 1783 1791 1800 1801 1802 1807 1812 1814 1816 1822 1827 1829 1832 1835 1836 1849 2904 2905 3133 3134 3137 3139 முதல் 3153 3155 முதல் 3174 3176 முதல் 3182 3184 முதல் 3188 3190 முதல் 3212 3214 3215 3216.

---

ப்ரகாச வள்ளலார் அருளிய 'திரு வடிப் புகழ்ச்சி'யினை உணர்வு நிலை யில் வைத்துப் பாராயணம் செய் தால்,திருமூலர் குறப்பிடும் 'திருவடிப் பேறு' கிடைக்கும் என்பதின் உட் கருத்தும் இதுவே.

இந்த இடத்தில் ஒன்றை நாம் ஞாபகத்தில் வைக்க வேண்டும். இறைவனது திருவடிகளைத் துதித்து, வணங்கி, வாழ்த்தி, போற்றும்போது ஏதோ மனிதனுடைய இருபாதங்கள் போன்று இறைவனுக்கும் இரண்டு கால்கள் உள்ளன என்றும், அவற்றைத் தான் நாம் சிந்திக்கிறோம் என்று கொள்ளக்கூடாது. மேலே கூறிய வண்ணம் 'திருவடி' என்பதற்கான ஆழ்கருத்தினை மனதில், சித்தத்தில், உணர்வில் கொண்டு, பாவனையுடன் வணங்கி, தியானித்தால் அன்பு முத லிய பண்புகள் எல்லாம் நம்முள் பெருகி, இறைத்தன்மை நம்மில் விளையும்.

ஒருவன் பிறருக்கு அஞ்சலி செய் யும் போது அவனை வணங்குகிறான். சிரேயஸான (நன்மைபயக்கக்கூடிய) புஷ்பம், கனி, கந்தம் போன்ற பொருட்களைக் கொண்டும் வணங்கு கிறான். அதனால் இருவருக்குமே உவகை பூக்கிறது. பரஸ்பரம் அன்பு வளர்கிறது. அதுபோலவே இறை வனது பாதத்தில் அஞ்சலி செலுத் தும்போது நம்மையறியாமல் ஓர் உள்ளக்கிளர்ச்சி, உவகை பிறக்கி றது. இறைவன்பால் அன்பும் வளர்கி றது. (இது உணர்ச்சிவயப்படும்போது தான் ஏற்படும். வெறும் சடங்குகளில் ஏற்படுவதில்லை.) (இறைவனுக்கு, அவனுடைய குழந்தைகளாகிய நம்பால் எப்போதுமேதான் அன்பு உள்ளதே!)

எல்லா உயிர்களுமே இறைவனது குழந்தைகள் என்ற அன்பு உணர் வுடன், 'யான்', 'எனது' என்ற இரண்டும் அற்ற இடமே (அதாவது 'ஆணவம்' நீங்கிய நிலையே) திருவடி தரிசனம் என்றும்; சரியை, கிரியை முடித்து,யோகத்தில் ஆழ்ந்து பெறும் ஞான நிலையே திருவடிப்பேறு என் றும், மாயை எனும் இருள் அகன்று, இறைஞானம் உதிக்கும் இடமே திரு வடி என்றும் பலவாறாக, ஆனால் உண்மையில் ஒன்றேயான இறை வனையே குறிப்பர்.

இறைசக்திகளெல்லாம் நம்முடைய சஹஸ்ராதார சக்கரம் முதல் மூலா தாரம் வரை உள்ள எல்லா ஆதார சக்கரங்களிலும் ஊடுருவிப் பாய்ந்து கொண்டேயிருக்கிறது என்பதனால் இறைவனது இணையார் திருவடிகளை சிரமேல் வைத்து வணங்குவது பல சமயத்திலும் உள்ள ஒரு வழக்கு. (இரண்டு பாதங்களில் ஒன்று சிவத் தன்மையதென்றும், மற்றயது சக்தி தன்மையது என்று கொள்வர். இறை வனை அம்மையப்பரான நிலையிலேயே காண்பது சைவ சித்தாந்தம் போன்ற சமயங்களின் மரபு). வைணவத்தில், திருவடிகள் பதிந்த சடகோபுரம் எனும் 'சடாரி'யையே பக்தர்களின் சிரசில் சாத்துவது வழக்கம்.

அநுபூதிமான்கள், தபஸ்விகள், யோகிகள் மற்றும் சிறந்த ஞானிகள் தமது பாதங்களைத் தமது சீடர்களது சிரசில் வைத்து ஸ்பர்ஸ தீக்ஷை, பாத தீக்ஷை செய்விப்பதும் உண்டு.

இப்படி ஞானிகள் முதலியோரு டைய பாதங்களிலோ, இறைவனது திருவடிகளிலோ வீழ்ந்து பணிவது, 'எனக்குப் புகலிடம் வேறில்லை; நின் பாதங்களே எனது சரண்; என் னைக் காத்து ரக்ஷித்தருள்' என்று பக் தர்கள் 'சரணாகதி' மொழிவது ஆகும்.

இப்படிப் பல விதங்களில்கருத்துப் பட 'திருவடி சரணம்' வகுக்கப் பட்டுள்ளதைத் தெரிந்து, உள்ள உணர்வுடன் அத்திருவடிகளை நாடி உய்வோமாக! ★



# உண்மை என்பது யாது?

**सत्यं वद** என்கிறது வேதம். வேதமும் தர்ம சாஸ்திரங்களும் உண்மையையே பேசும்படி நமக்குக் கட்டளையிடுகின்றன. மற்ற கட்டளைகளை நிறைவேற்றுவதற்குக் கட்டளையிடப் பட்ட மனிதனிடம் சில தகுதிகள் அவஸ்யம். உண்மை பேசுவதற்கு ஒரு தகுதியும் வேண்டியதில்லை. யாரும் பேசலாம், எந்த ஸமயமும் பேசலாம். ஆண், பெண், வர்ணம், ஆச்ரமம் போன்ற ஒரு வித வித்யாஸமும் இந்த விஷயத்தில் கிடையாது.

உண்மையைக் கூறுவதற்குச் சிரமப் பட வேண்டியதேயில்லை. பொய்யைக் கற்பிக்கத்தான் சிரமம் எடுத்துக்கொள்ள வேண்டும். ஆனால் உண்மை விளம்புதல் என்பதின் பொருளென்ன? முதலில் இதென்ன கேள்வி என்று தோன்றும். கண்ட அல்லது கேட்ட விஷயத்தை உள்ளபடியே உரைப்பது உண்மை என்பது யாரும் அறிந்ததே என்றே நினைப்பர். ஆனால் நடைமுறையில் உண்மை என்பது யாது என்பதைக் குறிப்பாக அறிவது கடினம். இதைச் சில உதாஹரணங்கள் மூலம் விளக்குவோம்.

**யுதிஷ்டிரர் :**

போர்க்களத்தில் தர்மபுத்ரரை **अश्वत्थामा हतः कुञ्जरः** "கொல்லப்பட்டான் அச்வத்தாமா என்ற யானை" என்று அறிவிக்கும்படி செய்தனர். அவர் **अश्वत्थामा हतः** என்றதும் கண்ண பிரான் தமது பாஞ்ச ஜன்யத்தை ஊதுவார். ஆக யானை கொல்லப்பட்டது என்பது தெரியாமல், தன்னுடைய புத்ரனை அச்வத்தாமாதான் கொல்லப்பட்டான் என்று க்ருபாசார்யர் நினைப்பார். அவரை ஜயிக்க முடியாததால் இந்த உபாயம் செய்தால் புத்ர சோகத்தினால் அவர் களைத்து விடுவார் என்று இந்த ஏற்பாடு செய்யப்பட்டது. இது உண்மையைக் கூறியதில் சேருமா?

**ஸ்ரீ ராமர் :**

ஸ்ரீமத் வால்மீகி ராமாயண ஆரம்பத்தில் வால்மீகி பகவான் நாரதரிடம் பல உயர்ந்த குணங்களைக் கூறி, இவற்றையுடைய சிறந்த புருஷன் இப்போது இவ்வுலகத்தில் இருப்பவன் யார்? என்று வினவுகிறார். அவற்றில் ஐந்தாவது குணம் ஸத்ய வாக்ய; என்பது. ஸ்ரீராமர் இந்த குணத்திற்குப் புகழ் பெற்றவர். தாமே அவர் கைகேயியிடம் கூறுகிறார்.

**तद्ब्रूहि वचनं देवि राज्ञो यदभिकाङ्क्षितम् ।**
**करिष्ये प्रतिजाने च रामो द्विर्नाभिभाषते ॥**

(அயோத்யா காண்டம் 18-30):

"தேவியே! ராஜாவால் எது விரும்பப்படுகிறதோ அந்த வாக்யத்தைச் சொல்லவும். அதை நான் செய்வேன், அவ்விதமே ப்ரிதஜ்ஞையும் செய்கிறேன். ராமன் இரு முறை பேசுவதில்லை",

மறுபடியும் கிஷ்கிந்தா காண்டத்தில் ஸ்ரீ ராமர் ஸுக்ரீவனுக்குக் கூறுகிறார்.

**अनृतं नोक्तपूर्वं मे न च वक्ष्ये कदाचन ।**
**एतत्ते प्रतिजानामि सत्येनैव शपाम्यहम् ॥**

(7-22)

"நான் இதுவரை ஒருபோதும் பொய் சொன்னதில்லை, இனிமேலும் ஒருபோதும் பொய் சொல்ல மாட்டேன். இதை உனக்கு உறுதி கூறுகிறேன். ஸத்யத்தின் மேல் ப்ரதிஜ்ஞை செய்கிறேன்"

மற்றொரு முக்ய ஸந்தர்பத்தில் ஸீதையிடமே ஸ்ரீராமர் கூறியதாவது;

**अप्यहं जीवितं जह्यां त्वां वा सीते सलक्ष्मणाम् ।**
**न तु प्रतिज्ञां संश्रुत्य ब्राह्मणेभ्यो विशेषतः ॥**

(ஆரண்ய 10-18.)

"என் உயிரை விட்டாலும் விடுவேன், லக்ஷ்மணனோடு உன்னையும் த்யாகம் செய்தாலும் செய்வேன். ஆனால் ப்ரதிஜ்ஞை செய்துவிட்டு, அதுவும் விசேஷமாக ப்ராஹ்மணர்கள் விஷயத்தில், பின்வாங்க மாட்டேன்!"

ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் **सत्यसन्धः** (512) என்ற நாமாவுக்குத் தமது பாஷ்யத்தில் ஸ்ரீபராசர பட்டர் மேற்கூறிய ச்லோகத்தை உதாஹரிக்கிறார். ஆக, ஸ்ரீராமர் ஸத்ய ஸந்தன். **रामो विग्रहवान् धर्मः** என்று தர்மமே உருவெடுத்தவர் என்று புகழ் பெற்றவர். அப்படிப்பட்ட சக்ரவர்த்தித் திருமகன் என்ன செய்தார் என்று ஆராய்வோம்.

ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்தில் ஸ்ரீராமர் காட்டுக்குச் செல்வதை இவ்விதம் காண்கிறோம்.

**तिष्ठेति राजा चुक्रोश याहि याहीति राघवः ।**
**सुमन्त्रस्य बभूवात्मा चक्रयोरिव चान्तरा ॥**

(அயோ. 40-46).

"தசரதன் 'நில்' என்று உரக்கக் கூக்குரலிட்டான். ராமனோ 'செல், செல்' என்றான். இவ்விதம் ஸுமந்திரரின் மனம் இரண்டு சுற்றும் சக்கரங்கள் நடுவில் அகப்பட்டவன் நிலையை அடைந்தது".

**திரு. லா. ஸ்ரீநிவாசன்—புது தில்லி.**

*ஸுமந்திரரின் ஸங்கடத்தைக் கண்ட ராகவன் அவரிடம் கூறுகிறார்.*

**नाश्रौषमिति राजानमुपालब्धोऽपि वक्ष्यसि ।**
**चिरं दुःखस्य पापिष्ठमिति रामस्तमब्रवीत् ॥**

(அயோ. 40-47).

"நீ திரும்பச் சென்றதும் அரசன் உன்னை வினவினாலும் 'உமது ஆஜ்ஞை எனது காதில் விழவில்லை' என்று சொல்வாயாக. அரசனின் இந்த துக்கத்தை நீளும்படி செய்தல் பாபமாகும்".

ராமர் ஸுமந்திரரை உண்மையல்லாததைக் கூறும்படிச் சொல்கிறார் அல்லவா? இது சரியா?

**ஸீதை :**

அசோகவனத்தில் ஹனுமானைக் கண்டதும் ராக்ஷஸிகள் ஸீதையிடம் 'இவன் யார்? யாருடைய தூதன்? எங்கிருந்து எதற்காக வந்திருக்கிறான்? உன்னிடம் என்ன சொன்னான்?' என்று வினவினர். அப்போது ஸீதை யளித்த விடை வருமாறு

**रक्षसां कामरूपाणां विज्ञाने का गतिर्मम ।**
**यूयमेवास्य जानीत योऽयं यद्वा करिष्यति ॥**
**अहिरेव ह्यहेः पादान् विजानाति न संशयः ।**
**अहमप्यतिभीतास्मि नैव जानामि को ह्ययम् ॥**
**वेद्मि राक्षसमेवैनं कामरूपिणमागतम् ।**

(ஸுந்தர காண்டம் 428,9,10)

"காம ரூபிகளான ராக்ஷஸர்களின் ஞானத்திற்கு எனக்கு வழி ஏது? இவன் யார் அல்லது என்ன செய்யப் போகிறான் என்பதை நீங்களே அறிவீர்கள். பாம்பின் கால்கள் பாம்புக்குத்தான் தெரியும், இதில் ஸந்தேஹமில்லை. நானும் மிகுந்த பயந்தவளாய் உள்ளேன், இவன் யாரென்றுமறியேன். இஷ்டப்படி ரூபமெடுக்கக் கூடிய ராக்ஷஸன் இங்கு வந்துள்ளான் என்று இவ்வளவே யானறிவேன்".

**இது ஸத்யமான வாக்கா?**

**விதஹவ்யன்:**

மஹாபாரதத்தில் அநுசாஸன பர்வத்தில் விதஹவ்யன் என்ற அரசனின் சரித்ரமுள்ளது. அவன் சத்துருவால் முறியடிக்கப்பட்டு, தனது நூறு புத்ரர்களையும் போரில் இழந்து, மிகவும் தயனீய தசையில் ப்ருகுமஹர்ஷியின் ஆச்ரமத்தையடைந்து அவரைச் சரண் புகுகிறான். அவனைத் துரத்திக் கொண்டு வந்த எதிரி அங்கு வந்து வாயில் காப்பாளனிடம் 'இந்த ஆச்ரமத்தில் க்ஷத்ரியர்கள் எவரேனும் உளரோ?' என்று வினவினான். அப்போது உள்ளிருந்த ரிஷி தாமே வெளியில் வந்து, "இங்கு க்ஷத்ரியர் எவருமில்லை. யாவரும் ப்ராஹ்மணர்களே" என்று விடையளித்தார்.

இது உண்மையைத் தழுவிய வசனமாகுமா?

**பசு :**

அதேபோல் ஒரு பசுவை ஒரு மிலேச்சன் ஏந்திய கத்தியுடன் துரத்திக்கொண்டு வருகிறான். வழியிலுள்ள ரிஷியை "இவ்வழியே பசு போகக் கண்டீரோ?" என்று கேட்கிறான். பசு போன இடம் அவருக்குத் தெரிந்திருந்தும் அதை அவர் காட்டிக் கொள்ளவில்லை.

**ததிபாண்டன் :**

கண்ணனின் தொல்லை தாங்காமல் யசோதை கோபத்தோடு அவனைத் துரத்திக்கொண்டு வருகிறாள். கண்ணன் காற்றாய்ப் பறந்து போய் ததிபாண்டனைச் சரணமடைகிறான். அவன் குழந்தையை மறைத்து வைத்தது மல்லாமல், யசோதை வந்து கேட்டபோதுதான் கண்ணனைப் பார்த்துப் பல நாட்களாயிற்று என்று கூசாமல் கூறினான்.

இம்மாதிரி ஸந்தர்பங்களில் உண்மை பேசப்பட்டதா என்று முடிவு செய்வது சிரமமாகத் தோன்றும். யக்ஷப்ரச்னத்துக்கு யுதிஷ்டிரர் பதில் கூறியபடியும், வாலிக்கு ராமர் விடையிறுத்தவாறும், தர்மம் மிகவும் ஸூக்ஷ்மமானது, எளிதில் அறியவல்லதல்ல.

ரிஷிகள் **सत्यं भूतहितं वाक्यं** என்று எது ஸகல ஜந்துக்களின் நன்மைக்காக அமைந்ததோ அதுவே ஸத்யமென்று அறுதியிட்டனர். மேலும் **सत्यं ब्रूयात् प्रियं ब्रूयात्, न ब्रूयात्सत्यमप्रियं** உண்மையையே பேசு, ப்ரியமானதைப் பேசு, உண்மையாயினும் மற்றவர்களுக்குக் கேடு விளைப்பதைக் கூறாதே என்று விதிக்கின்றனர். ப்ரியமாயினும் பொய் சொல்லக்கூடாது, உண்மையாயினும் அப்ரியமானதை உரைக்கக்கூடாது, இதுவே ஸநாதன தர்மம் என்றனர். ஜோதிடர், ஒருவருக்கு விளையக்கூடிய திடீர் மரணம் போன்ற கேட்டை அவருக்குக் கூறக் கூடாது என்று கூறப்பட்டிருக்கிறது. வைத்யனும் வ்யாதியஸ்தனுக்கு உனக்கு இவ்வளவே வாழ்நாள் என்று நேரிடையாகத் தெரிவிக்கக் கூடாது. இவற்றிற்கும் மேற்கூறிய ஸநாதன தர்மக்கட்டுப்பாடே காரணம்.

ஒருவனுடைய மனோவாக்காயங்களின் ப்ரவ்ருத்திகளில் ஒற்றுமை இருக்கவேண்டும். அதாவது நினைத்ததையே சொல்லவேண்டும், சொன்னதையே செய்ய வேண்டும். இதை ஆர்ஜவம் என்பர். இது உத்தமர்களிடமுள்ள குணம். துஷ்டர்கள் இதற்கு மாறாக நடப்பர். ஆகவே கபடத்துடன் எது கூடியதோ அது உண்மையல்ல என்று மற்றோர் விளக்கமும் கிடைக்கிறது.

இப்போது முன்பு எடுத்த உதாஹரணங்களை, பிறருக்கு நன்மை விளைவித்தல், கபடமில்லாமலிருத்தல் என்ற கருத்துக்களை மனதில் கொண்டு, விசாரிப்போம். தர்மபுத்திரர் கூறியது உண்மையல்ல என்பது வெளிப்படை. அதற்காக அவருக்கு நரக தர்சனம் கிடைத்தது.

சக்ரவர்த்தித் திருமகன் தான் திரும்பிச் சென்றால் தசரதனின் ப்ர

திஜ்ஞை கெட்டுவிடும், அதனுல் அவ ருக்கு மேலும் துக்கமே உண்டாகும் என்ற பரந்த நோக்கத்தினுல், தசரத ரின் நன்மையின் பொருட்டு ஸுமந் திரரை 'உமது ஆஜ்ஞை எனது காதில் விழவில்லை' என்று கூறும்படி சொன்ஞர்.

எந்த விதிக்கும் விலக்குண்டு என் பது யாவரும் அறிந்ததே. ஸீதை யின் விஷயம் இதன் கீழ் வருகிறது. ஸ்ரீமத் பாகவதத்தில் சுக்ராசார்யர் மஹாபலியை தானம் செய்யத் தடுக் கும்போது கீழ்க்கண்ட ஸமயங்களில் பொய் சொல்வதை சாஸ்திரம் அநு மதிக்கிறது என்கிறுர். ஸ்த்ரீகளிடம் (ரதி ஸமயத்தில்) வேடிக்கையில், விவாஹத்தில், ஜீவனத்துக்காக, உயி ருக்கு ஆபத்து நேரிடும்போது, கோப் ராஹ்மணர்களின் ஹிதத்தின் பொருட்டு, மற்ெருருவருக்கு ஆபத்து வரும் ஸமயத்தில். மஹாபாரதம் ஆதிபர்வத்தில் யயாதி-சர்மிஷ்டை ஸம்வாதத்திலும் இவ்வாறு காண் கிறது. ஆகவே, ஹநுமாருக்கு ஆபத்து வரும் என்ற பீதியினுல் ஸீதை உண்மையை உரைக்கவில்லை.

தன்னைச் சரணமடைந்தவனை ப்ரா ணனைக் கொடுத்தும் காக்கவேண்டு மென்று சாஸ்திரம் விதிக்கிறது. இதுவே எல்லாவற்றையும் விட மேம்பட்ட தர்மம். ஆகவே ப்ருகு தன்னைச் சரணமடைந்த வீதஹவ்ய னைக் காப்பாற்றும் பொருட்டு அங் குள்ளவர் யாவரும் அந்தணரே என் றுர்.

மிலேச்சனுக்குப் பசு கிடைத்திருந் தால் அவனுக்குப் பசி தீர்ந்திருக்கும் என்று வீண்வாதம் செய்யலாம். ஆயினும் அதனுல் அவன் நரகமே அடைவான். ஆகையால் அது அவ னுக்கு உண்மையில் ஹிதமாகாது. மேலும், பசுக்களைக் காப்பது பரம தர்மம். தவிரவும் அந்த ரிஷி மிகச் சாதுர்யமாக பதில் கூறியதாகச் சொல்லப்படுகிறது. அதாவது "கண் பார்க்கும் ஆனுல் பேசாது, வாய் பேசும் ஆனுல் பார்க்காது" என்றவாறு. மிலேச்சன் அதைக் கேட்டு அவரைப் பைத்தியமென்று நினைத்துத் தன்வழியே போனுன். ஆக, முடிந்தால் பொய் சொல்லாமல் தப்பித்துக் கொள்ள வேண்டும். முடியாவிட்டால் அவசியம் நேர்ந்த விடத்தில் கூசாமல் பொய் சொல்ல லாம். மஹாபாரதத்திலேயே கண்வ பர்வதத்தில் கௌசிகனின் சரித்ர முள்ளது. எந்த ஸந்தர்ப்பத்திலும் உண்மையே உரைப்பதாக விரதங் கொண்டிருந்த அவன், திருடர்கள் சில வழிப்போக்கர்களைப் பற்றிக் கேட்ட போது, அவர்கள் இருப்பிடத் தைத் தெரிவித்து அதனுல் நரக மடைந்தான் என்று சொல்லப்பட்டி ருக்கிறது.

ததிபாண்டன் செய்தது கண் ணன், யசோதை இருவருக்கும் நன் மையில் முடிந்தது. ஏனெனில் யசோதை கண்ணனைப் பிடித்திருந் தால் அடித்திருப்பாள். பிறகு மிக வருத்தம் அடைந்திருப்பாள். கண் ணனும் அடிபடாமல் தப்பினுன்.

**உண்மையின் ஸ்வரூபம் :**

"ஒரு வஸ்துவை உள்ளபடி கண்டு, தான் கண்டபடியே அதைப் பற்றிப் பேசுவது உண்மை" என்று உண்மை யின் லக்ஷணம் உரைக்கலாம் என்று சிலர் கருதுவர். ஆனுல் ஒருவன் சிப் பியை வெள்ளியாகத் தவருகக் கண்டு அவ்விதமே உரைக்கக்கூடும். ஆகவே எம்பெருமானுர் கீதாபாஷ் யத்தில் (10-4) "எவ்விதம் காணப் பட்டதோ அவ்விதம் உரைப்பதும், ஸர்வபூதஹிதமாயுமுள்ளது ஸத் யம்" என்று இலக்கணம் அருளியுள் ளார். ஹிந்து மதத்தின் பல பிரிவு களில் தவருக அறிவதைப் பற்றிப் பல கொள்கைகளுள்ளன. அவற் றுள் விசிஷ்டாத்வைதத்தின் கொள் கைக்கு யதார்த்த க்யாதி அல்லது ஸத் க்யாதி என்று பெயர். அதன் படி நாம் காண்பது யாவும் உண் மையே. தவருக ஒன்றைக் கண் டோமென்றுல் அதில் உண்மையின் ஓர் அம்சத்தையே கண்டோம், மற்ற அம்சங்களையும் கண்டால் முழு உண்மை வெளியாகும் என்பதாம். ஆகவே ஸ்ரீ பாஷ்யத்தை **सत्यैकालम्बि भाष्यं** என்று கொண்டாடுகிறுர். ஸ்வாமிதேசிகன் அதிகரணஸாரா வளியில். இதற்கு இரண்டு பொருள்க ளுண்டு.உபநிஷத்தில் கூறிய உண்மை யையே தழுவியது என்றும், யாவற் றையும் உண்மையாகக் கொள்ளும் ஸத் க்யாதியை அடிப்படையாகக் கொண்டது என்றும் கூறுவர்.

**உண்மையின் சக்தி :**

நடுவில் திருவீதிப்பிள்ளை பட்டர் என்பவரை அவ்வூர் அரசன் ராமன் மனித பாவனை செய்து கொண்டு ஸீதை போன இடம் தெரியாமல் தேடும் போது **मया त्वं समनुज्ञातो गच्छ लोकाननुत्तमान्** "என்னுல் அனு மதிக்கப்பட்டவனாய் நீ உயர்ந்த லோகங்களை அடைவாயாக" என்று ஜடாயுவுக்கு எவ்விதம் மேல் லோகத்தை அளித்தார் என்று ஸபை யில் கேட்டானும். அவரும் **सत्येन लोकान् जयति** என்று ராமாயணத் திலேயே உள்ள ச்லோகத்தைக்காட்டி தன் ஸத்யத்தின் பலத்தினுல் ராமன் உலகங்களை வெல்கிறுன் என்றுராம். அரசன் மகிழ்ந்து அவரை கௌரவித் தான்.

முண்டகோபநிஷத் (3-1-6) கூறுவ தாவது : "ஸத்யம் ஒன்றே வெல் லும், அஸத்யமல்ல. ஸத்யத்தினுல் தேவயானம் அல்லது அர்ச்சிராதி என்று கூறப்படும் வைகுண்டத்துக் குச் செல்லும் ராஜமார்க்கம் சீராகக் காப்பாற்றப்பட்டு வருகிறது. அதன் மூலமே விரக்தர்களான ரிஷிகள் சிறந்த பொக்கிஷமான ப்ரஹ்மம் உள்ள இடத்தை அடைகின்றனர்".

ப்ரச்நோபநிஷத் (1-15) உரைப்ப தாவது : "எவர்கள் தபஸ்ஸையும் ப்ரஹ்மசர்யத்தையும் கடைப்பிடிக் கிறுர்களோ, எவர்களிடம் ஸத்யம் நிலைத்திருக்கிறதோ அவர்களுக்கு பரப்ரஹ்மத்தின் லோகமுண்டு."

உண்மை எப்படியும் வெளிவந்து விடும் என்பது உலக வழக்கு. சில ரைப் பல காலமோ, பலரைச் சில காலமோ ஒருவன் ஏமாற்றலாம், யாவரையும் நெடுநாள் ஏமாற்ற முடி யாது, உண்மை வெளிவந்தே தீரும். வீதஹவ்ய வ்ருத்தாந்தத்தில் ப்ருகு மஹரிஷி தன் ஆச்ரமத்தில் உள்ள வர் யாவரும் அந்தணரே என்று கூறி யதின் பலனுக அவ்வரசன் ப்ராஹ் மணனுகிவிட்டான் என்கிறது மஹா பாரதம். உண்மையைக் கைப்பிடித்த மஹரிஷியின் வாக்குக்கு அவ்வித பலன். அவர் சொன்ன எதுவும் உண்மையாகி விடும். என்னே உண் மையின் சக்தி! ★

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

மக்களிடையே விளம்பரபடுத்தி, அத் திட்டத்தினை மேலும் விரிவாக்கிடும் வகையில், இது சம்பந்தமாக விளம் பரம் ஒன்றினைத் தொலைக் காட்சி யிலும், வானொலியிலும் இடம் பெறும் வகையில் முடிவு ஒன்று மேற் கொள்ளப்பட்டுள்ளது. 'இராமாயண' தொடர் காட்சியின் முன்பு 20 வினாடி கள் ஒளி பரப்ப ரூ. 1.40 இலட்சமும், பம்பாய்,சென்னை, டெல்லி,கல்கத்தா, ஹைதராபாத் ஆகிய வானொலி நிலை யங்களில் 20 வினாடிகள் வீதம் ஒரு வாரத்திற்கு ஒலி பரப்ப ரூ. 14,000/-மும் ஒதுக்கப்பட்டுள்ளன. இவ்விளம் பரத்தினை ஒலிப்பதிவு மற்றும் ஒளிப் பதிவு செய்யும் பணி சென்னை 'ஜெயஸ்ரீ பிக்சர்ஸ்' எனும் நிறுவ னத்தாருக்கு ஒப்படைக்கப்பட்டுள் ளது.

### புஷ்ப பல்லக்கு ஆர்ஜித ஸேவை

திருமலையில் ஒவ்வொரு ஆண்டும் நடைபெறும் ஆனிவார ஆஸ்தானத் தின் போது பலவண்ண மலர்களால் அலங்கரிக்கப்பட்ட பல்லக்கில் உத் சவர் திருவீதி வலம் வரும் நிகழ்ச்சி நடைபெற்று வருகின்றது. 'புஷ்ப பல்லக்கு' எனும் இந்நிகழ்ச்சியில் பக் தர்களும் பங்கேற்கும் வகையில் இதனை ஓர் ஆர்ஜித ஸேவையாக மேலாண்மை புகுத்தியுள்ளது. ரூ. 1000/- செலுத்தி பக்தர்கள் இதில் பங்கேற்கலாம். கிருஹஸ்தர் உள்ளிட்டு 5 நபர்கள் இத்திருவீதி வலத்தில் பங்கேற்கவும், இலவசமாக தரிசன வசதியும் பெறுவர். கிருஹஸ் தர்க்கு ஒரு பட்டு மேல் துணியும், இரவிக்கைத் துண்டும், கோவில் பிர ஸாதங்களான ஒரு பெரிய லட்டும், வடையும் வழங்கப்படும்.

### பெரிய ஜீயர் ஸ்வாமியின் பரமபத ப்ராப்தி

ஸ்ரீமத் பரமஹம்ஸ திருமலை திருப் பதி தேவஸ்தான தர்மகர்த்தாவான பெரிய கோவில் கேள்வி அப்பன் சுந் தரராமாநுஜ பெரிய ஜீயர் ஸ்வாமி தனது 77வது வயதில், 12-5-1988 அன்று பரமபதம் அடைந்தார். இந்த ஸ்வாமி இந்த மடத்தின் 40-வது ஸ்தானத்தில் அபிஷிக்தரா யெழுந்தருளியிருந்தார். பகவத் விஷயத்திலும் ஸ்ரீராமாயணாதிகளி லும் நிஷ்ணாதர். எம்பெருமானார் காலம் தொடங்கி இடைவிடாமல் பரம்பரையாக 39 ஸ்வாமிகள் ஏள்ளி யிருந்து இந்த ஸ்வாமி 40வது ஜீயர் ஸ்வாமியாக 13 ஆண்டு காலம் வாழ்ந்து ஒழியில் காலமெல் லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்து போந்தார்.

மே 12ஆம் தேதியன்று தேவஸ் தான உயர் அதிகாரியான ஸ்ரீ Ch. வெங்கடபதி ராஜு, I.A.S. அவர்கள் மற்றும் தேவஸ்தான அதிகாரிகள் ஸ்வாமியின் சரம திருமேனியைத் தரிசித்தனர்.

தக்க தேவஸ்தான மரியாதை களுடன் மூன்று மணிகாலம் வைதிக சடங்குகள் செய்து மறுநாள் (13ம் தேதி) ஸ்வாமியைப் பிருந்தாவனத் தில் எழுந்தருளப் பண்ணினர். பெரிய மடத்து முத்திரை மனிதரால் இறு திச் சடங்குகள் செய்யப்பட்டன.

ஆளவந்தார்படி ப்ரகாரம் ப்ரம் மரதம் செய்யப்பட்டு, ஸ்ரீ கோவிந்த ராஜஸ்வாமி கோவில் நான்கு மாட வீதிகள் வலம் வந்து, ஸ்வாமிக்கு வேத ஒலியுடன் திருமஞ்சனம் செய் யப்பட்டு, பிருந்தாவனத்திற்கு ஊர் வலமாக எழுந்தருளப் பண்ணினர். பெரிய காவிய உடையாலான உறை யில் 10 அடி பள்ளத்தில் திருமலை யைப் பார்த்தபடி எழுந்தருளப் பண் ணினர்.

வழுவிலா அடிமை செய்து வந்த இந்த ஸ்வாமி, ஸ்ரீகோவிந்தராஜன் சந்நிதியில் நின்று போயிருந்த ஆழ் வாராசாரியர்களின் திருநட்சத்திரங் களை மறுபடியும் நடத்திக் கொண்டு வந்தார். அருளிச்செயல் கோஷ்டி யில் இவருக்குள்ள ஈடுபாடு வாசாம கோசரம். இவர் பூர்வாச்ரமத்தில் ஸ்ரீவில்லிபுத்தூர், மதுரை, திருமோ கூர் முதலான திவ்ய தேசங்களில் திவ்யபிரபந்த அத்யாபகராக பல ஸம்வத்ஸரங்கள் கைங்கர்யங்கள் செய்துவந்தார். தினந்தோறும் திரு மலையில் ஸ்ரீ திருவேங்கடமுடையான் ஸந்நிதி திறவுகோலும் மற்ற சாவி களும் திருப்பதியில் ஸ்ரீ கோவிந்த ராஜன் ஸந்நிதி திறவுகோலும் மற்ற சாவிகளும் இப்பெரிய ஜீயர் ஸ்வாமி மடத்திற்கு இரவில் ஏள்ளப்பண்ணி மறு நாள் காலை மறுபடியும் தீவட்டியுடன் ஏள்ளப்பண்ணிக் கொண்டு செல்வார் கள். இவ்விதப் பெருமை எந்த மடத் திற்கும் இல்லை. ஜீயர் ஸ்வாமிகளோ அவரால் நியமிக்கப்பட்ட ஏகாங்கி ஸ்வாமிகளோ இல்லாமல் கோவில் காரியங்கள் ஒன்றுகூட நடைபெறாது. மேலும் திருநின்றவூர் ஸந்நிதி தர்ம கர்த்தாவும் இந்த பெரிய ஜீயர் ஸ்வா மிக்கே உரித்தாகும். அங்கும் கோவில் நிர்வாகம் இவர் மூலமா கவே இன்றும் நடந்து வருகிறது. இப்படிப்பட்ட பெரிய ஜீயர் ஸ்வாமி திருநாடலங்கரித்தது ஸ்ரீவைஷ்ணவ உலகுக்கே பேரிழப்பாகும். சிலநாட் களில் இந்த ஸ்தானத்தில் இவரால் முன்பே ஏற்படுத்தப்பட்ட ஸ்ரீமத் பரமஹம்ஸ இளைய கோயில் கேள்வி அப்பன் **ஸ்ரீ கோவிந்தராமானுஜ** சிறிய ஜீயர் ஸ்வாமி அபிஷிக்தரா வார்.

தகவல்; (தி. அ. கோபாலாசார்யா)
திருப்பதி.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517507.





AT VIJAYAWADA

Sri V. Nageswara Rao, Minister for Agriculture, A.P. participating as Chief Guest.

The Minister receiving the memento from Sri S.K. Jaya Chandra, I.P.S., Security Officer, T.T.D.





AT KAKINADA

Sri J. Bapu Reddy, Commissioner Endowments, A.P. participating as Chief Guest.

Gita International Party's Dance Programme






AT TIRUPATI

Prof. Veeraiah, S.V. University participating as Chief Guest

The Utsavamurthi of Sri Govindaraja Swamy Temple at Annamacharya Kala Mandiram.

